ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆழ்வார் விஷயம்

(கண்ணிநுண்சிறுத்தாம்பு)

'அயர்வறுமமரர்களதிபதி தொழுதெழன் மனனே'

நம்மாழ்வார் – பெருமாள்கோயில்

**ஆசிரியர்: தேசூர் நல்லான் சக்ரவர்த்தி ஸ்ரீவத்ஸாங்கன்**

மந்மத ௵ சித்திரை ௴ சித்திரை (03.05.2015) ஞாயிற்றுக்கிழமை

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆழ்வார் விஷயம்

(கண்ணிநுண்சிறுத்தாம்பு)

ஆசிரியர்:

தேசூர் நல்லான் சக்ரவர்த்தி ஸ்ரீவத்ஸாங்கன்

மந்மத ஹு சித்திரை மீ சித்திரை (03.05.2015) ஞாயிற்றுக்கிழமை

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆசிரியர் முன்னுரை

பகவத் விஷயமென்கிற சொல் 'பகவானேவ விஷய: பகவத்விஷய:' என்கிற வ்யுத்பத்தியின்படி பகவானையே விஷயமாகக் கொண்டதான திருவாய்மொழிக்கும் அதன் வ்யாக்யானங்களுக்கும் தொன்றுதொட்டு வழங்கப்பட்டு வரும் திருநாமமாகும். ஆக பகவானை ஆராதிக்கைக்கு ஆயிரம் பாசுரங்கள் வேண்டிற்று. நம் ஆழ்வாரை ஆராதிக்கைக்கு பத்து பாட்டே அமைந்தது. பகவதநுபவமாகிற ஸாகரத்தில் திளைத்த நம்மாழ்வார், அவ்வநுபவத்தாலுண்டான ப்ரீதியுள்ளடங்காமல் வெளியிட்ட நாலு ப்ரபந்தங்களைப் பட்டோலை கொண்டவர் மதுரகவியாழ்வார். எம்பெருமானிடம் ஆராத காதல் கொண்ட ஆழ்வாரையே தமது ஆசார்யராக ஏற்ற மதுரகவிகள், ஆழ்வார் வாயிலாகவே திருவாய்மொழியைக் கற்று, 'திருமாலடியார்களே நமக்கு ஸ்வாமிகள்' என்பதேயதன் ஸாரமென்றறுதியிட்டு, ஆழ்வார் விஷயமாக 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' எனும் ப்ரபந்தத்தையருளிச் செய்தார். இதில் 'தேவுமற்றறியேன்' - ஆசார்யரான ஆழ்வாரையொழிய வேறு தெய்வமறியேன் - என்று ஆசார்ய வைபவத்தை வெளியிடுகிறார். இப்ப்ரபந்தத்தின் ஆரம்பத்திலுள்ள சொற்றொடரையே அதற்குப் பெயராக இட்டனர் நம் முன்னோர்.

மணவாளமாமுநிகள், 'வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம் போல் சீர்த்த மதுரகவி செய்கலை' என்று இப்ப்ரபந்தத்தைக் கொண்டாடுகிறார். 'நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் உற்றதும் உன்னடியார்க்கடிமை' என்றிறே கலியன் திருவாக்கு! ஆழ்வார்தாமும் தம் திருவாய்மொழியில் 'பங்கயக் கண்ணனை ....... பயிலும் திருவுடையார் .......... எம்மையாளும் பரமரே' என்றருளிச் செய்தார். ஸ்வரூபம் ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வமாயின், ஸ்வரூப யாத$_2$ாத்ம்யம் (வடிகட்டின நிலை) ததீ$_3$யஶேஷத்வ பர்யந்தமாயிருக்கும். ஒரு வஸ்துவிலே நாம் அன்பு வைத்தால் அவ்வன்பு அந்தவொரு வஸ்துவோடு முடிந்து போகாமல், அத்தோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமும் பரம்பரா ஸம்பந்தமும் பெற்ற வஸ்துக்களிலேயும் பரந்து செல்வதுபோலே, பகவானிடத்தில் நாம் செலுத்தும் அன்பும் அவனளவிலே சுவறிப்போகாமல் அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியாரடியார் பக்கலிலும் பெருகிச் செல்லுமாகையால், பா$_4$க$_3$வத ஶேஷத்வமென்பது ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வத்தின் எல்லை நிலமாயிருக்கும்.

பா$_4$க$_3$வத ஶேஷத்வத்தை திருமந்த்ரத்திற்குத் தலையான பொருளாகக் கூறுவர் நம் பெரியோர். இதில் எந்த எழுத்தினால் அல்லது பதத்தினால் பா$_4$க$_3$வத ஶேஷத்வம் தெரிவிக்கப்படுகிறது என்னில் - லுப்த சதுர்த்தியோடு கூடின அகாரத்தில் பகவானுக்கு

ஶேஷப்பட்டிருத்தல் தெரிவிக்கப்படுகிறது. ப4ாக3வத ஶேஷத்வம் ப4க3வச்சே2ஷத்வத்தின் எல்லை நிலமாதலால், ப்ரணவத்தில் லுப்த சதுர்த்தியோடு கூடிய அகாரத்திலும் பா4க3வத ஶேஷத்வத்தையநுஸந்திக்கலாம். உகாரத்தில், பகவானுக்குத் தவிர மற்றையோர்கட்கு ஶேஷப்பட்டவனல்லன் எனும் அநந்யார்ஹத்வம் தெரிவிக்கப்படுகிறது. ப4ாக3வதர்கள் பகவானுடைய திருவடி ஸ்தானத்திலே சேர்ந்தவர்களாகையால், ப4ாக3வத ஶேஷத்வத்தை உகாரத்திலும் அநுஸந்திக்கலாம். இவ்வாறு அர்த்த2 ப3லத்தால் ப்ரணவத்திற்குள்ளேயே ப4ாக3வத ஶேஷத்வத்தை யநுஸந்திக்கலாமாயினும், இடையிலுள்ள நம: பதத்திலே அநுஸந்திப்பதே மிகவும் பொருத்தமானது என்பது நம்மாசார்யர்களின் திருவுள்ளம். நமஶ் ஶப்தம் – 'எனக்கு நான் உரியனல்லன்' என்று மமதா நிவ்ருத்தியையும், மமதைக்கு ஊற்றான அஹங்கார நிவ்ருத்தியையும், இப்படி நிவ்ருத்தமான ஸ்வரூபத்தின் பாரதந்த்ர்யத்தையும், பாரதந்த்ர்ய காஷ்டையான (எல்லையான) ததீ3ய ஶேஷத்வத்தையும், பரதந்த்ரனுக்கு அநுரூபமான உபாயத்தையும் தெரிவிக்கிறது. நமஸ்ஸின் அர்த்தம் நெஞ்சில் நன்கு ஊறி அஹங்கார மமகாரங்கள் நீங்கப்பெற்றவர்களுக்கே ப4ாக3வத ஶேஷத்வம் ருசிக்குமாகையால், நம்மாசார்யர்கள் ப4ாக3வத ஶேஷத்வத்தை நம: பதத்திலே அநுஸந்திக்கும்படி நியமித்தருளினார்கள்.

தனியே பகவதநுபவம் செய்வதிலும், அடியார் திரளிலே அந்வயித்திருந்து அது செய்கை மிகவும் ரஸித்திருக்குமிறே. ஆழ்வார், 'அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்று கொலோ' என்று பாரித்து, பின் பேறு பெற்றதாகச் சொல்லுமிடத்து, 'வந்தவரெதிர்கொள்ள மாமணிமண்டபத்து அந்தமில்பேரின்பத்து அடியரோடிருந்தமை' என்று அடியார்கள் திரளில் கலந்து பரிமாறப் பெற்றபடியை அருளிச்செய்து தலைக்கட்டினார். கைங்கர்ய நித்ய நிரதைர் ப4வதே3க போ4கை3ர், நித்யைர் அநுக்ஷண நவீநரஸ ஆர்த்3ர ப4ாவை: ! நித்ய அபி4வாஞ்சி2த பரஸ்பர நீச ப4ாவை:, மத்3 தை3வதை: பரிஜநைஸ் தவ ஸங்க3ஸீய !! (ஸ்ரீவை.ஸ். 77) 'கைங்கர்யத்திலே என்றும் நிரதராய், உன் பக்கலிலே ஒருபடிப்பட்ட போகத்தையுடையராய், என்றும் உளராய், க்ஷணந்தோறும் புதிதாக விளைகின்ற பகவதநுபவ ரஸத்தாலே உருகின நெஞ்சையுடையராய், பாகவதர்களுள் பரஸ்பரம் ஶேஷத்வத்தையுடையராய், அடியேனுடைய தெய்வங்களான உன்னுடைய பரிஜநங்களோடே கூடுவேனாக வேணும்' என்கையாலே மோக்ஷத3ஶையிலும் ததீ3யஶேஷத்வமுண்டென்று சொல்லிற்று. முதலில் நமக்கு ஆசார்யாந்வயத்துக்கு வழிகாட்டிகளாயிருப்பதாலும், இங்கிருக்கும் நாள் 'போ3தய4ந்த: பரஸ்பரம்' பண்ணுகைக்கு உசாத்துணையாகையாலும், பரமபதத்திலும் எல்லை நிலமாயிருப்பதாலும் பாகவதர் உத்தேஶ்யராகிறார்கள்.

எம்பெருமானை ஆஶ்ரயிப்பதிலும் அவனடியார்களை ஆஶ்ரயிக்கை சிறந்ததென்னா, அத்தகைய அடியார்களில் அக்3ரேஸரரான (தலைசிறந்தவரான) ஆசார்யனை ஆஶ்ரயித்திருப்பது மிகவும் சிறந்த மோக்ஷோபாயம் என்பது பெரியோர் துணிபு. ஆக, ப்ரதம பர்வம் – பகவான்; மத்யம பர்வம் – பாகவதர்; சரம பர்வம் – ஆசார்யன். ஶேஷியான

பகவானுக்குத் தன் திறத்தில் செய்யும் கைங்கர்யத்தைக் காட்டிலும் தன்னடியார் திறத்தில் செய்யும் கைங்கர்யம் மிக உகப்பாகையாலே, பகவத் கைங்கர்யமாகிற பேற்றின் வளர்ச்சி (ஸாத்$_4$ய வ்ருத்$_4$தி$_4$) பாகவத கைங்கர்யமாகிறது. அந்த பாகவதர்களுக்கும் தம் திறத்தில் செய்யும் கைங்கர்யத்தைக் காட்டிலும் தங்களுக்கு உபகாரரான ஆசார்யன் திறத்தில் செய்யும் கைங்கர்யமே மிகவும் உகப்பாகையாலே, அந்த பாகவத கைங்கர்யமாகிற பேற்றின் விசேஷ வளர்ச்சி (ஸாத்$_4$ய விவ்ருத்$_4$தி$_4$) ஆசார்ய கைங்கர்யமாகிறது. 'ஆசார்ய தேவோ பவ' (ஆசார்யனை பரதெய்வமாகக் கொள்வாய்) என்று வேதமும் ஆசார்யனிடத்திலே பரதத்வ புத்தி பண்ணச் சொல்லிற்று. எம்பெருமானார் ஆளவந்தாரின் சீடரான திருவரங்கப்பெருமாளரையர் பக்கல் ஆறுமாதம் தொண்டு செய்து அவரையுகப்பிக்க, அரையரும் 'வாரீர் எம்பெருமானாரே! உமக்கொரு சரம புருஷார்த்த$_2$ஞ் சொல்லுகிறோம், கேளீர். அறியாதனவறிவித்த ஆசார்யனே உபாயோபேயம் என்று விஶ்வஸித்திருப்பீர். 'ஆசார்யஸ்ஸ ஹரிஸ்ஸாக்ஷாத் சரரூபி ந ஸம்ஶய:' என்றும், 'பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து' என்றும் சொல்கிறபடியே உறங்கும் பெருமாள்தானே உலாவும் பெருமாளாய் வந்தார் என்றிரும்' என்று பஞ்சமோபாய நிஷ்டை$_2$யான சரமபர்வார்த்த$_2$ விஶேஷத்தை ப்ரஸாதித்தருளினார். ஈஶ்வர ஸம்பந்தம் போல் பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிராமல், மோக்ஷத்துக்கே ஹேதுவாயிருப்பதிறே ஆசார்ய ஸம்பந்தம்! பிள்ளையுறங்காவில்லிதாஸர் எம்பெருமானாரிடம் 'ஸ்ரீவிபீஷணாழ்வான் ஸ்வாபி$_4$மாநத்தைவிட்டுப் பெருமாள் திருவடிகளே தஞ்சமென வந்தபோதும், பெருமாள் பரிகரம் கல்லுந்தடியும் கொண்டதே; அடியேன் பெருமாள் கோஷ்டிக்கு ஆள் ஆவேனோ என்ன, 'உமக்கு நானுண்டு: எனக்கு பெரிய நம்பியுண்டு' என்று ஆசார்ய ஸம்பந்தத்தையே மோக்ஷோபாயமாக வருளிச்செய்து ஶிஷ்யனுக்கு அப$_4$யமளித்தாரிறே. ஈஶ்வரனைப் பற்றுவது கையைப்பிடித்துக் கார்யங்கொள்ளுவது போலே – ஸ்வதந்த்ரனான எம்பெருமானை நேராகப் பற்றினார்க்கு ப$_2$லஸித்$_3$தி$_4$யில் ஸந்தே$_3$ஹமுண்டு. ஆசார்யனைப் பற்றுவது காலைப் பிடித்துக் கார்யங் கொள்ளுவதுபோலே – அவனுக்கு திருவடி ஸ்தானத்திலுள்ள ஆசார்யனைப் பற்றினார்க்கு பேற்றில் கண்ணழிவு இல்லை. 'கண்ணுடையவன் குருடனைக் கையைப்பிடித்து அவன் நினைத்த தேஶத்திற்கு அழைத்துச் செல்லுமாப் போலேயும், ஓடமுடையவன் முடவனை ஓடத்திலேயேற்றி அக்கரைக்கு கொண்டு போமாப்போலேயும், ராஜஸேவகன் தான் பெறும் த$_4$னத்தைக் கொண்டு, தன் புத்ராதிகள் ராஜாவை அறியாதிருக்கச் செய்தேயும் அவர்களை பு$_4$ஜிப்பித்திருக்குமாப் போலேயும், ரங்கே$_3$ஶனே! ஶிஷ்யனுக்கு உன்னைப் பெறுவிக்குமிடத்திலும் த$_3$யாளுவான ஆசார்யனே தன் வைப$_4$வத்$_3$தாலே ஸமர்த்த$_2$னாகா நிற்கிறான்' என்று அபி$_4$யுக்தர்களும் சொன்னார்கள்.

ஆசார்யனையே தெய்வமாகக் கொள்வது 'மதுரகவி நிஷ்டை' எனப்படும். சித்திரை மாதம் சித்திரை நக்ஷத்திரத்திலேயவதரித்த அனந்தாழ்வான், தம் ஆசார்யரான எம்பெருமானாரிடம் ஊன்றிய மனத்தராய், திருவேங்கடவனுக்கு எம்பெருமானாருகந்த தொண்டினையே செய்து வந்ததால் தன்னை 'மதுரகவி தாஸன்' என்றே சொல்லிக் கொண்டும், தம்மைச் சேர்ந்த புத்ர சிஷ்யர்களுக்கு 'மதுரகவி தாஸன்' என்பதையே தாஸ்ய நாமமாகவும் நியமித்தார்.

எதிராஜரையே தமக்கு ஸகலமுமாகக் கொண்டதால் யதீந்த்ர ப்ரவணர் (எதிராஜரிடத்தில் ஊன்றியவர்) என்று புகழ்பெற்ற மணவாள மாமுனிகள் 'மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்' என்று சரமபர்வ நிஷ்டையில் தம் அத்யவஸாயத்தைச் சொல்லி பெருமை கொள்கிறார். மேலும், 'உய்ய நினைவுண்டாகில் உங்குருக்கள் தம் பதத்தே வையும் அன்புதன்னை இந்த மாநிலத்தீர், மெய்யுரைக்கேன் பையரவில் மாயன் பரமபதமுங்களுக்காம் கையிலங்கு நெல்லிக்கனி' என்று பொய்யில்லாத மணவாளமாமுனிகள் 'மெய்யுரைக்கேன்' என்கையாலே – உயரத்திலிருக்கிற ப$_2$லமானது அடியிலேயிருக்க மடியிலே விழும் – பேறு தப்பாது என்று துணிந்திருக்கலாமன்றோ. மதுரகவிகளும் தம் ப்ரபந்தத்தில் 'மதுரகவி சொன்ன சொல் நம்புவார் பதி வைகுந்தம் காண்மினே' என்று தாம் வெளியிட்டுள்ள ஆசார்ய நிஷ்டையை நம்பியொழுகுபவர்க்கு வஸ்தவ்ய தேஶம் பரமபதம் என்றருளிச் செய்துள்ளார். ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்று அவரைச் சார்த்தியிருப்பார் தவம். எம்பெருமானை ஏத்தியிருந்தார் – நம்மாழ்வார். அவரைச் சார்த்தியிருந்தார் (ஆஶ்ரயித்திருந்தார்) மதுரகவிகள். சார்த்தியிருந்தவர் தவம் ஏத்தியிருந்தவர் தவத்திலும் உயர்ந்தது.

உத்ஸவ காலங்களில் திருவீதிகளில் திருவாய்மொழி, அமலனாதிபிரான் முதலான ப்ரபந்தங்கள் ஓதப்படுவதில்லை. அதேபோல் இப்ப்ரபந்தமும் திருவீதிகளில் ஓதப்படாமல், ஸந்நிதியில் எம்பெருமான் திருமுன்பே திருவாய்மொழியை ஸேவிக்கத் தொடங்கும் போதும் முடிக்கும்போதும் ஓதப்படுகிறது. திவ்யப்ரபந்தம் உலகெங்கும் பரந்ததற்குக் காரணம் இக்கண்ணிநுண்சிறுத்தாம்பே யாகும். நாதமுனிகள், திருக்குருகூரில் ஆழ்வார் திருமுன்பே இப்ப்ரபந்தத்தையன்றோ பன்னீராயிரம் உரு ஸேவித்து, யோக தஶையில் ஆழ்வாரை ஸாக்ஷாத்கரித்து, மறைந்துபோன நாலாயிரத்தையும் நமக்குப் பெற்றுக் கொடுத்தது! இதில்லையேல் நாலாயிரமுமில்லை.

இப்ப்ரபந்தத்துக்கு நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆகிய நான்கு பூர்வாசார்யர்கள் வ்யாக்யானமிட்டருளியுள்ளார்கள். மேலும், 'தம்பிரான்படி' எனும் ஓர் அரையரின் உரையும் (முதல் பாசுரத்திற்கு மட்டும்) காணப்படுகிறது. அடியேன் பல வருடங்களுக்கு முன் இவ்வ்யாக்யானங்களை ஸேவித்து ஓர் உரையெழுதி வைத்திருந்தேன். அதனை, அஸ்மதாசார்யர் கீர்த்திமூர்த்தி ஸ்ரீ உ.வே. தேசூர் நல்லான் சக்ரவர்த்தி ஸ்ரீநிவாஸ வரதாசார்ய ஸ்வாமியின் அநுக்ரஹத்தைப் ப்ரார்த்தித்துக் கொண்டு, வருகிற மந்மத வருஷம் சித்திரையில் சித்திரை நாளில் வெளியிடுகிறேன். இது தன்னிலே காணப்படும் குற்றங்குறைகளை பெரியோர் க்ஷமித்தருளுமாறு இறைஞ்சுகிறேன். இந்நூலை அச்சிட்டுதவிய ஆர்.என்.ஆர் அச்சுக்கூட உரிமையாளர் ஸ்ரீமாந் ராஜன் அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*12.02.2015* ந.ச. ஸ்ரீவத்ஸாங்க தாஸன்

*புது.எண். ப்ளாட் 16A, 4வது தெரு,*
*வோல்டாஸ் காலனி, நங்கநல்லூர், சென்னை-600061.*



நம்மாழ்வார் – ஆழ்வார்திருநகரி

பத்$_3$மாஸநோபவிஷ்டம் பரபத$_3$யுக$_3$ளே நிவிஷ்ட சைதன்யம் ।
பரதத்வபே$_3$ாத$_4$முத்$_3$ரம் பரமாசார்யம் பராங்குஶம் வந்தே$_3$ ॥

(பத்மாஸனத்தில் எழுந்தருளியிருப்பவராய், பரமபுருஷனின் திருவடியிணையிலே ஊன்றிய நுண்ணறிவையுடையவராய், பரதத்துவத்தைக் காட்டும் ஞான முத்திரையை உடையவராய், பரமாசார்யரான பராங்குசரை வணங்குகிறேன்.)



'சடகோபனைச் சிந்தையுள்ளே பெய்தற்கிசையும் பெரியவர்'

மதுரகவியாழ்வார் – திருக்கோளூர்



ஸ்ரீ உ.வே. தேசூர் நல்லான் சக்ரவர்த்தி ஸ்ரீநிவாஸ வரதாசார்ய ஸ்வாமி

தர்ஶனே தர்ஶனே ஸந்திவிவாதா: ஸர்வவாதிநாம் |
ஸம்மதம் ஸர்வலோகாநாம் தர்ஶநம் சக்ரவர்த்திநாம் ||
நெளமி நல்லான் சக்ரவர்த்தி வம்ஶ்யம் ஸத்குணஸாகரம் |
ஸ்ரீந்ருஸிம்மாசார்ய தநயம் ஸ்ரீவாஸ வரதம்குரும் ||

கு3ரோர் நாம ஸதா3 ஜபேத் – இதுக்கடி உபகார ஸ்ம்ருதியிறே.



இந்நூலாசிரியர்:

தேசூர் நல்லான் சக்ரவர்த்தி ஸ்ரீவத்ஸாங்கன்

# நம்மாழ்வார் வைபவம்

வகுளாப$_4$ரணம் வந்தே$_3$ ஜக$_3$த$_3$ாப$_4$ரணம் முநிம் ।
யஶ் ஶ்ருதேருத்தரம் ப$_4$ாக$_3$ம் சக்ரே த்$_3$ராவிட$_3$ ப$_4$ாஷயா ॥

(யாவரொரு ஆழ்வார் – வேதத்தின் உத்தர காண்ட$_3$மாகிய உபநிஷத்தைத் தமிழ்மொழியினால் வெளியிட்டருளினாரோ, உலகுக்கெல்லாம் அலங்காரபூ$_4$தராய், மகிழ்மாலை மார்பினரான அந்த நம்மாழ்வாரை வணங்குகிறேன்.)

பாண்டிய நாட்டிலே தாம்ரபர்ணிக் கரையிலுள்ள *திருக்குருகூரில் வேளாள வருணத்தில் திருமாலுக்கே தொண்டு பூண்டொழுகும் குலத்தில் பிறந்த காரியார் எனும் பரமபாகவதருக்கும் அவருடைய பத்நியாரான உடையநங்கையாருக்கும் †திருக்குறுங்குடிநம்பியின் திருவருளால் கலி பிறந்த நாற்பத்து மூன்றாவது நாளில் ப்ரமாதி$_2$ வருஷம் வைகாசி மாதம் விசாக நக்ஷத்திரத்தில் விஷ்வக்ஸேனரின் அம்ஶமாக திருவவதரித்தவர் நம்மாழ்வார். 'தாம்ரபர்ணீ நதீ யத்ர' என்று இவருடைய அவதாரம் ஸ்ரீபாகவதத்திலும் (11.5.39) உணர்த்தப்பட்டது.

பிறந்தபொழுதே தொடங்கி அழுதல், பாலுண்ணுதல் முதலிய லோக வ்யாபாரமொன்றுமின்றி வாட்டமேதுமின்றி பரிபூர்ணராயிருக்கிற அதிஶயத்தைக் கண்ட தாய்தந்தையர் எம்பெருமான்மேல் ப$_4$ாரத்தை வைத்துப் பிறந்தபின் பன்னிரண்டாம் நாள் திருக்குருகூரில் கோயில் கொண்டுள்ள பொலிந்துநின்ற பிரான் ஸந்நிதிக்குக் குழந்தையை எடுத்துச்சென்று அப்பெருமான் திருமுன்பே உலகநடைக்கு மாறாக இருந்ததனால் 'மாறன்' என்று திருநாமம் சாத்தி அருகிலிருந்த ‡திருப்புளியமரத்தினடியில் தொட்டிலிலே வளர்த்தி ஓம்பி வந்தார்கள். கர்ப்ப$_4$த்தில் இருக்கும்போது குழந்தைகளின் அறிவை மறைக்கும் ஶட$_2$வாயுவை, பிறக்கும்போதே தம்மை மேலிடாதபடி ஹுங்காரத்தாலே ஓட்டியவராகையாலே இவர் 'ஶட$_2$கோபர்' எனும் திருநாமத்தையும், பொலிந்துநின்ற பிரான் ப்ரஸாதித்தருளிய மகிழமாலையை த$_4$ரித்ததனால் 'மகிழ்மாலை மார்பினர்' 'வகுளாப$_4$ரணர்' எனும் திருநாமங்களையும், நம்பெருமாளாகிய ஸ்ரீரங்கநாதனால் 'நம் ஆழ்வார்' என்று அபி$_4$மானிக்கப் பெற்றதால் 'நம்மாழ்வார்' எனும் திருநாமத்தையும், பிற மதங்களாகிய யானைகளைத் தமது திவ்யப்ரப$_3$ந்தங்களில் அருளிய தத்வார்த்த$_2$ங்களால் செருக்கடக்கி,

---

* திருக்குருகூர் எனும் பெயர் நூல் வழக்கில் மட்டுமே உள்ளது. ஆழ்வார் அவதரித்த காரணத்தால் அப்பெயர் வழக்குமாறி 'ஆழ்வார் திருநகரி' என்றே தற்போது வழங்கப்படுகிறது.

† காரியார் தன் பத்னியின் பிறந்தகமான திருவண்பரிசாரத்துக்குச் சென்று மீண்டு தன் ஊருக்குத் திரும்பும்போது வழியில் திருக்குறுங்குடி நம்பியிடம் 'அடியோங்களுக்கு ஒரு ஸந்தாநம் தந்தருள வேணும்' என்று ப்ரார்த்திக்க, நம்பியும் 'நாமே வந்து பிறக்கிறோம்' என்று அர்ச்சக முகே$_2$ந வரப்ரத$_3$ாநம் பண்ணியருளியதால் ஆழ்வார் திருவவதரித்ததாகச் சரித்திரம்.

‡ திருவநந்தாழ்வான் அவதாரம் என்று போற்றப்படும் புளியமரத்தினடியில் ஆழ்வார் எழுந்தருளியிருந்ததனால் அதனை 'திருப்புளியாழ்வார்' என்றே சிறப்புடன் வழங்குவர்.

அவற்றுக்கு அங்குஶம் எனும் கருவிபோலே இருக்கையால் 'பராங்குஶர்' என்னும் திருநாமத்தையும் பெற்றார்.

இத்தகைய ஆழ்வார் இவ்வுலகில் தம்மைப் போன்ற நிலையுடையார் எவரையும் உலகத்தில் காணாமையால் பதினாறு பிராயமளவும் கண்விழியாமல் மௌனத்தோடு எழுந்தருளியிருக்க, அப்பொழுது பரமபதநாதனது நியமனத்தால் ஸேனைமுதலியார் எனும் விஷ்வக்ஸேனர் ஏகாந்தமாக எழுந்தருளி இவருக்கு திருவிலச்சினை செய்து ஸகல மந்த்ரார்த்தங்களையும் உபதேஶித்தருளினார். (யாரோடும் பேசாதிருந்த இவரை ஸந்தித்த மதுரகவியாழ்வார் இவரை வாய்திறக்க வைத்து இவருக்கு ஶிஷ்யரான வ்ருத்தாந்தங்கள் மதுரகவியாழ்வார் வைபவத்தில் காணலாம்).

பரவாஸுதேவனும், வ்யூஹமூர்த்திகளும், விப₄வமூர்த்திகளும், அந்தர்யாமி எம்பெருமானும், தி₃வ்யதே₃ஶங்களில் எழுந்தருளியிருக்கும் அர்ச்சா மூர்த்திகளும் திருப்புளியாழ்வார் அடியிலே எழுந்தருளியிருக்கும் ஆழ்வாருடைய நெஞ்சென்னும் உட்கண்ணுக்கு ஸேவை ஸாதித்தார்கள். அவர்களை ஸேவிக்கவே, அவ்வெம்பெருமான்களுடைய ஸ்வரூப ரூப குண விபூ₄திகளை அநுப₄வித்து, அவ்வநுப₄வத்தாலுண்டான ப்ரீதி உள்ளடங்காமல் வழிந்து திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி எனும் நாலு தி₃வ்ய ப்ரபந்தங்களாக வெளிப்பட்டது.

இதில் நூறு பாசுரங்கள் கொண்ட திருவிருத்தம் ருக்₃வேத₃ஸாரம் என்றும், ஏழு பாசுரங்கள் கொண்ட திருவாசிரியம் யஜுர்வேத ஸாரம் என்றும், எண்பத்தேழு பாசுரங்கள் கொண்ட பெரிய திருவந்தாதி அத₂ர்வணவேத ஸாரம் என்றும், ஆயிரத்து நூற்றிரண்டு பாசுரங்களும், நூறு திருவாய்மொழிகளும் (பதிகங்களும்), பத்து பத்துக்களும் (ஶதகங்களும்) கொண்ட ஒப்புயர்வற்ற திவ்யப்ரபந்தமான திருவாய்மொழி வேதங்களுள் ஒப்புயர்வற்றதான ஸாம வேதத்தின் ஸாரம் என்றும் முன்னோர்கள் அருளிச்செய்வர். நம்மாழ்வாருடைய நாலு திவ்யப்ரபந்தங்களின் பொருட்பெருமைகள் முழுவதையும், அவற்றுக்கு பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான்பிள்ளை, தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலான பூர்வாசார்ய வ்யாக்யாநங்களிலும், மணவாளமாமுநிகளின் வ்யாக்யாநத்தோடு கூடிய ஆசார்யஹ்ருதயம் எனும் அற்புத க்ரந்தத்திலும் விஸ்தாரமாகக் காணலாம்.

ஆழ்வாருடைய திருவாய்மொழியை அநுபவிப்பதற்காக நித்யஸூரிகளும் ஶ்வேத த்₃வீபவாஸிகளும், இவ்வுலகிலுள்ள ஸ்ரீவைஷ்ணவ ஶ்ரேஷ்ட₂ர்களும் திருப்புளியாழ்வாரடியிலே கூடினார்கள். அந்த மெய்யடியார்கள் கூட்டத்தைக் கண்டு 'பொலிக பொலிக பொலிக' (திருவாய் 5.2) எனும் திருவாய்மொழியிலே அவர்களுக்குப் பல்லாண்டு பாடி, 'கலியும் கெடும் கண்டு கொண்மின்' என்னும் பாசுரப்பகுதியாலே வரப்போகும் மஹாசார்யரான எம்பெருமானார் காலந்தொடங்கி ஸ்ரீவைஷ்ணவர்கள் திரள் லக்ஷோபலக்ஷமாகப் பெருகப் போவதை முன்கூட்டியே உணர்த்தியருளினார்.

பிறந்தது முதல் இவ்வுலக வாழ்க்கையில் ஈடுபடாமல், தாய்ப்பாலும் குடிக்காமல், திருத்துழாய் மணத்துடனே முளைப்பது போலே எம்பெருமான் அருளிய மயர்வற்ற மதிநலங்களான ஜ்ஞான ப$_4$க்திகளுடன் இவர் அவதரிக்கையாலே, *'வாஸுதே$_3$வஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது$_3$ர்லப$_4$:' என்று கீதையில் கண்ணனாலும் கொண்டாடப்பட்டவர் இவரே என விளங்கும். இதனாலேயே இவர் †ப்ரபந்நஜந கூடஸ்த$_2$ராகவும், ஆழ்வார்களில் தலைவராகவும், மற்றையாழ்வார்களை அவயவங்களாகக் கொண்டவராகவும் முன்னோர்களால் கொண்டாடப்படுகிறார். **இவர்க்கு பூ$_4$தத்தாழ்வாரை ஶிரஸ்ஸாகவும், பொய்கை பேயாழ்வார்களைக் கண்களாகவும், பெரியாழ்வாரை முக$_2$மாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும், குலசேகராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் கைகளாகவும், தொண்டரடிப்பொடியாழ்வாரை மார்பாகவும், திருமங்கையாழ்வாரை கொப்பூழாகவும், மதுரகவியாழ்வாரை திருவடிகளாகவும், எம்பெருமானாரை திருவடி நிலைகள் எனும் பாது$_3$கையாகவும் வழங்குவது மரபு. இவ்வாழ்வார் எம்பெருமானுடைய திருவடி நிலையாகவே இருப்பதுபற்றி எல்லா விஷ்ணுவாலயங்களிலும் பெருமாளுடைய பாதுகை 'ஶட$_2$ாரி' என்றும் 'ஶ்ரீஶட$_2$கோபன்' என்றும் வழங்கப்படுகிறது.

இத்தகைய பெருமைகளையுடைய இவ்வாழ்வார் – பரமாத்மாவின் ஸ்வரூபம், ஜீவாத்மாவின் ஸ்வரூபம், பரமாத்மாவையடைய உபாயம், அங்ஙனம் அடைதலின் பயன், அடைதற்குள்ள ப்ரதிபந்தகம் என்று ஸகல வேத சாஸ்த்ரங்களின் ஸாரமாகச் சொல்லப்பட்ட அர்த்த பஞ்சகத்தையும், மந்த்ர ஶ்ரேஷ்டமான த்வயமெனும் சரணாகதி மந்திரத்தின் அர்த்தத்தையும் ப்ரபந்த ரூபமாக யாவரும் எளிதில் அறியத் தெரிவித்தருளி, 'நளிர்மதிச்சடையனும் நான்முகக் கடவுளும், தளிரொளியிமையவர் தலைவனு முதலா, யாவகையுலகமும் யாவருமகப்பட, நிலநீர் தீகால் சுடரிரு விசும்பும், மலர்சுடர் பிறவும் சிறிதுடன் மயங்க, ஒரு பொருட்புறப்பாடின்றி முழுவதும் அகப்படக் கரந்தோராலிலைச் சேர்ந்த, எம்பெருமா மாயனையல்லது ஒருமா தெய்வம் மற்றுடையமோ யாமே' என்று தமது ஸித்தாந்தத்தின் தத்துவத்தை நன்கு வெளியிட்டு – வாழ்நாள் முழுதும் வேறு எதிலும் சிந்தை செலுத்தாது எம்பெருமானோடு கூடி மகிழ்ந்தும், அவனைப் பிரிந்து துன்புற்றும், பரப$_4$க்தி பரஜ்ஞாந பரமப$_4$க்திகள் வளரப்பெற்று முப்பத்தைந்து திருநக்ஷத்திரம் இந்நிலவுலகில் வாழ்ந்திருந்து 'சூழ்விசும் பணிமுகில்' (திருவாய் 10.9) என்னும் திருவாய்மொழியில் எம்பெருமான் தமக்குக் காட்டியபடியே அர்ச்சிராதி$_3$ க$_3$தியாலே சென்று நித்யஸூரிகளெல்லாம் எதிர்கொள்ள வைகுந்தமாநகர் புக்குத் திருமாமணி மண்டபத்திலே எம்பெருமானுக்கும் நித்ய பே$_4$ாக்$_3$ய வஸ்துவாய் அந்தமில் பேரின்பத்தை யடைந்தருளினார்.

* 'வாஸுதேவனே பரம ப்ராப்யமும், ப்ராபகமும், த$_4$ாரக போஷக போக்யங்களுமாவான்' என்று என்னைப் பற்றுகின்றவனே மஹாத்மா; அவன் கிடைத்தற்கரியவன். (கீதை 6-19)

† ப்ரபத்தி மார்க்கத்தையநுஷ்டிக்கும் வைணவர் எல்லோர்க்கும் தலைவர்.

**நாதமுனிகளுக்கு நம்மாழ்வார் தன் திருமேனியில் மற்றைய ஆழ்வார்களையும் காட்டித்தந்தபடி: ⟶

உண்டோ வைகாசி விசாகத்துக்கொப்பொருநாள்?
உண்டோ சடகோபர்க்கொப்பொருவர்? – உண்டோ
திருவாய்மொழிக்கொப்பு? தென்குருகைக்குண்டோ
ஒருபார் தனிலொக்குமூர். - உ.ப.ரத்.15

## நம்மாழ்வார் வாழித் திருநாமம்

மேதினியில் வைகாசி விசாகத்தோன் வாழியே
வேதத்தை செந்தமிழால் விரித்துரைத்தான் வாழியே
ஆதிகுருவாய்ப் புவியிலவதரித்தோன் வாழியே
அனவரதஞ் சேனையர்கோ னடிதொழுவோன் வாழியே
நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே
நன்மதுரகவி வணங்கும் நாவீறன் வாழியே
மாதவன் பொற்பாதுகையாய் வளர்ந்தருள்வோன் வாழியே
மகிழ்மாறன் சடகோபன் வையகத்தில் வாழியே.

நம்மாழ்வார் வைபவம் முற்றிற்று.
நம்மாழ்வார் திருவடிகளே ஶரணம்.

★ ★ ★

ரிஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ண த்ருஷ்ணா தத்வமிவோதி$_{3}$தம் ।
ஸஹஸ்ர ஶாக$_{2}$ாம் யோத்$_{3}$ராக்ஷீத் த்$_{3}$ராவிட$_{3}$ம் ப்$_{3}$ரஹ்மஸம்ஹிதாம் ॥
- ஸ்ரீர.ஸ்.பூ.ஶ. 6

(யாவரொரு முனிவர் ஆயிரம் பாசுரங்களையுடையதாய், தமிழிலே திருவாய்மொழியாகிற உபநிஷத்தை ஸாக்ஷாத்கரித்தாரோ, அப்படிப்பட்டவராய், இவ்வுலகில் அவதரித்த க்ருஷ்ணனிடத்தில் வைத்த ஆசையே ஒரு வடிவு கொண்டாற்போலிருக்கிற நம்மாழ்வாரை ஸேவிக்கிறோம்.)

வகுளத$_{4}$வள மாலா வக்ஷஸம் வேத$_{3}$ப$_{4}$ாஹ்ய
பரப$_{3}$ல ஸமயவாத$_{3}$ச் சே$_{2}$த$_{3}$நம் பூஜநீயம் ।
விபுல குருகநாத$_{2}$ம் காரிஸூநும் கவீஶம்
ஶரணமுபக$_{3}$தோऽஹம் சக்ர ஹஸ்தேப$_{4}$ சக்ரம் ॥ - ப்ரபந்நாம்ருதம் 33.11

(பரிசுத்தமான மகிழமாலையை திருமார்பில் அணிந்து கொண்டிருப்பவரும், வேதத்துக்குப் புறம்பான தீய சமயவாதங்களை கண்டிப்பவரும், அனைவராலும் பூஜிக்கத்தக்கவரும், விஸ்தாரமான குருகாபுரிக்குத் தலைவரும், கவிகளுக்கு நாயகரும், சக்ரமேந்திய பெருமானுக்கு முன்னே எழுந்தருளியிருப்பவரும், காரியின் குமாரருமான நம்மாழ்வாரைத் தஞ்சமாகப் பற்றுகிறேன்.)

---

→ **பூ$_{4}$தம் மஸ்தகம் அக்ஷிணீ ஹ்ரதிமஹத்ஸ்ரீ ச ப$_{4}$ட்டேஶ்வரம்
வக்த்ரம் ப$_{4}$க்திக$_{4}$நம் க$_{3}$ளம் குலஶிரோபூ$_{4}$ஷம் முநிம் க$_{3}$ாயகம் ।
தோர்யுக்$_{3}$மம் ஹரித$_{3}$ாஸ பத்$_{3}$ரஜ உரோ நாபி$_{4}$ம் கலித்$_{4}$வம்ஸிநம்
ஸ்ரீபாத$_{3}$ம் மதுரம்கவிம் யதிபதிம் சாஹு: ஶட$_{2}$ாரேர் பு$_{3}$த$_{4}$ா: ॥

# மதுரகவியாழ்வார் வைபவம்

துவாபர யுகத்தில் ஓர் ஈஶ்வர வருஷத்தில் சித்திரை மாதத்தில் சித்திரை நக்ஷத்திரத்திலே திருக்குருகூர் அருகிலுள்ள திருக்கோளூரிலே ஜைமிநி ஸாமவேதத்தை அத்₄யயனம் செய்யும் பூர்வஶிகையையுடைய ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மண குலத்தில் அவதரித்தவர் மதுரகவியாழ்வார். ஸூர்யோதயத்திற்கு முன் கிழக்கு திக்கில் காணப்படும் அருணோத₃யம் போலே, வகுளபூஷண ப₄ாஸ்கரர் அவதரிப்பதற்கு முன்னே கருடனுடைய அம்ஶமாகவும் குமுதன் எனும் க₃ணாதிபருடைய அம்ஶமாகவும் இவர் அவதரித்தார்.

வேத சாஸ்திரங்களை இளமையிலேயே பயின்று செவிக்கினிய செஞ்சொற் கவிகளைப் பாட வல்லவராய் அதனால் மதுரகவியென்று திருநாமம் பெற்று, மெய்யுணர்வினால் அவாவற்று மஹாவிரக்தராய், தீர்த்த யாத்திரை மற்றும் முக்தி தரும் நகர்களாகக் கீர்த்திபெற்ற அயோத்₄யை, மதுரை, மாயை, காஶீ, காஞ்சீ, அவந்தி, துவாரகை எனும் ஏழு நகரங்களையும் ஸேவித்துவர எழுந்தருளினார். இவ்வாறு வடநாட்டு திருப்பதிகளை ஸேவித்து வருகையில், அயோத்தி நகரையடைந்து அங்கு அர்ச்சாரூபியாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமபிரானையும், ஸீதாப் பிராட்டியையும் ஸேவித்துச் சில காலம் அங்கு எழுந்தருளியிருக்கையில் ஒரு நாளிரவில் திருக்கோளூர்ப் பெருமாளைத் திசைநோக்கித் தொழக்கருதித் தெற்கு திக்கில் கண் செலுத்தினபோது திவ்யமான பேரொளியைக் கண்ணுற்றார். தொடர்ந்து இரண்டு மூன்று நாட்கள் அப்பேரொளியைக் கண்டவாறே, 'இது ப்ராக்ருதமான தேஜஸ் அன்று. அப்ராக்ருதமான திவ்ய தேஜஸ்ஸாக இருந்தது. இது யாது என்று ஆராய்வோம்' என்று தேஜஸ்ஸே குறியாக தெற்கு நோக்கி எழுந்தருளினார். திருக்குருகூர் வரையில் தெரிந்த சோதி திருக்குருகூரில் தென்திசையில் காணாமையாலே இந்த சோதி இவ்வூரிலேயே இருக்கவேணும் என்று நிர்ணயித்து அங்கு திருப்புளியாழ்வாரடியிலே பத்மாஸநம் இட்டு அமர்ந்திருப்பவராய், பரதத்வத்தைக் காட்டும் சிந்முத்₃ரையைக் கையாலே காட்டுமவராய் மஹா தேஜஸ்வியாய் விளங்கின நம்மாழ்வாரைக் கண்டு, இவரது தேஜஸ்ஸே அத்தனை நெடுந்தூரம் ப்ரகாசித்ததென்றறிந்து இவர்க்கு உணர்ச்சி உளதோ? இலதோ? என்று சோதிக்கும் பொருட்டு ஒரு கல்லையெடுத்து அவர் முன்னே போட, அவ்வொலி கேட்டு நம்மாழ்வார் திடுக்கென்று கண்விழித்து கடாக்ஷித்தருள, மதுரகவிகளும் இவர் வாய் பேசுவரோ? என்றறிய 'செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத்தின்று எங்கே கிடக்கும்?' (அசித்தாகிற சரீரத்திலே அணு அளவினதான ஆத்மா ஸம்பந்தித்தால் அது எதை அநுபவித்து எங்கு இருக்கும்?) என்று வினவ, ஆழ்வார் 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' (அச்சரீரத்தைச் சார்ந்த ஸுகது:க்கங்களை அனுபவித்துக் கொண்டு அதனையே ஆஶ்ரயித்திருக்கும்) என்று விடையருளிச் செய்தார். இதைக் கேட்டு மதுரகவிகள், 'இவர் எல்லாமறிந்த ஜ்ஞானியாயிருந்தார்; இவரை ஆஶ்ரயித்து உய்வோம்' என்று நினைத்து, ஆழ்வார் திருவடிகளிலே தெ₃ண்டனிட்டு அவரையே எல்லாமாகக் கொண்டு கைங்கர்யம் செய்து வந்தார்.

அவ்வாறு இருக்கையில், எம்பெருமானாலே மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார், அவனோடு மாநஸ ஸாக்ஷாத்காரத்தாலே உண்டான ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களாகிற அநுபவங்களுக்குப் போக்குவீடாக ருக், யஜுஸ், அதர்வணம் என்ற மூன்று வேதங்களின் ஸாரப்பொருளை முறையே திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்ற மூன்று ப்ரபந்தங்களின் மூலமாக வெளியிட்டு, வேதங்களில் சிறந்ததான ஸாம வேதத்தின் தத்துவப் பொருளைச் சரம ப்ரபந்தமான திருவாய்மொழியால் அருளிச்செய்து அவற்றை மதுரகவிகளுக்கு உபதேஶித்தருளி அவாவற்று வீடுபெற்றார். மதுரகவிகள் ஆழ்வார் விஷயமாகத் தாம் பாடியருளிய 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்னும் திவ்யப்ரபந்தத்தையும் தாம் ஆழ்வாரிடம் உபதேஶம் பெற்ற திவ்யப்ரபந்தங்களையும் கைத்தாளமெடுத்துப் பண்ணிசையோடு எப்பொழுதும் பாடிக்கொண்டும் அவற்றின் பொருளையும் உலகுக்கு உபதேஶித்துக் கொண்டும் வாழ்ந்து வந்தார்.

ஆழ்வார் பிரிவை ஆற்ற மாட்டாமல், அவர் அவதரித்த திருக்குருகூரில் ஆழ்வாருடைய அர்ச்சா விக்ரஹத்தை ஏறியருளப் பண்ணி அவர்க்கு நித்ய நைமித்திக உத்ஸவங்களையெல்லாம் சிறப்புற நடத்திக்கொண்டு 'காரிமாறர் வந்தார், சடகோபர் வந்தார், பராங்குஶர் வந்தார், திருக்குருகூர்நம்பி வந்தார், திருவழுதி வளநாடர் வந்தார், திருநகரிப் பெருமாள் வந்தார், திருவாய்மொழிப் பெருமாள் வந்தார், நாட்கமழ் மகிழ்மாலை மார்பினர் வந்தார், வேதம் தமிழ் செய்த பெருமாள் வந்தார்' என்று பல விருதுகளைக் கூறி திருச்சின்னம் முழங்கி நாடெங்கும் அவர் திவ்யப்ரபந்தங்களைப் பரப்பி வந்தார். அதைக் கேட்ட அக்காலச் சங்கப்புலவர்கள், 'இவர் சங்கமேறிய புலவரோ? இவர் பாடிய திருவாய்மொழி சங்கமேறிய செய்யுளன்றே; இவரை வேதம் தமிழ் செய்தவரென்று சிலாகிப்பது தகுதியோ? என்று பல குதர்க்கம் பேசி விருது முழங்குவதைத் தடுத்தார்கள். அதற்கு மதுரகவிகள் 'எங்கள் ஆழ்வார் உங்கள் சங்கப் பலகைக்கு எழுந்தருளமுடியாதாகையால், அவருடைய திருவாய்மொழியில் 'கண்ணன் கழலிணை' என்னும் துணுக்கை எழுதிய இந்த ஓலையை உங்கள் சங்கப் பலகையிலே வையுங்கள்; பலகை இதற்கு இடம் கொடுத்தால் அவரை ஏற்றுக் கொண்டதாகும்' என்று அவ்வோலையைக் கொடுத்தார். அவ்வண்ணமே முந்நூறு தமிழ்ப்புலவர்கள் ஏறியிருந்த சங்கப் பலகையிலே இவ்வோலையை வைத்தார்கள். உடனே அப்பலகை அந்த முந்நூறு புலவர்களையும் தாம் மிதக்கும் பொற்றாமரைப் பொய்கையிலே கவிழ்த்துத் தள்ளி 'கண்ணன் கழலிணை' என்னும் ஆழ்வார் வாய்மொழி எழுதப்பெற்ற ஓலையை மட்டும் த₄ரித்துக் கொண்டு மிதந்தது. நீரில் விழுந்த புலவர்கள் அமிழ்ந்து தடுமாறியெழுந்து மெல்ல நீந்திக் கரைசேர்ந்து 'எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப்பெற்று நம்மாழ்வார் பாடிய பாசுரங்களே திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்கள்' என்று உணர்ந்து க₃ர்வமிழந்து, அவரிடம் முன்பு அபசாரப்பட்டதற்கு அநுதாபம் கொண்டு, அதற்குப் ப்ராயஶ்சித்தமாக ஒவ்வொருவரும் ஒவ்வொரு துதிப்பாடலைப் பாடினார்கள். அங்ஙனம் பாடின பாடல்கள் யாவும்,

'சேமங்குருகையோ செய்ய திருப்பாற்கடலோ
நாமம் பராங்குசமோ நாரணமோ – தாமந்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு
முளவோ பெருமானுனக்கு?'

என்ற இப்பாடலாக சிறிதும் வேற்றுமையின்றி ஒற்றுமைப்பட்டிருக்க, இதுபற்றி அவர்களனைவரும் 'இது என்ன அற்புதம்! என்ன அற்புதம்; இதுவும் ஆழ்வாரது தெய்வத் திருவருளே!!' என்று அதிஶயப்பட்டார்கள். இதன் மூலம் ஸ்ரீமந்நாராயணனே நம்மாழ்வாராக அவதரித்திருக்கிறார் என்று உணரப் பெற்ற அவர்கள் ஆழ்வாரிடம் மிகவும் ஈடுபட்டு,

ஈயாடுவதோ கருடற்கெதிரே? இரவிக்கெதிர் மின்மினியாடுவதோ?
நாயோடுவதோ வுறுப்புலிமுன்? நரிகேசரிமுன் நடையாடுவதோ?
பேயாடுவதோ அழகூர்வசிமுன்? பெருமானடிசேர் வகுளாபரணன்
ஓராயிர மாமறையின் தமிழின் ஒருசொற்பொறுமோ வுலகிற்கவியே?

என்னும் பாசுரத்தில் 'தங்களுடைய கவிதைகளெல்லாம் ஆழ்வாருடைய வாக்கில் தோன்றிய தமிழ்மறையின் ஒரு சொல்லுக்கு ஈடாகாது' என்று அநுஸந்தித்து தாங்களே ஆழ்வாருடைய விருதுகளை முழங்கிக் கொண்டு அவருக்கு பலவிதமான சிறப்புகளை நடத்தி வைத்தார்கள்.

இவ்வண்ணம் மதுரகவியாழ்வார் ஆழ்வாருக்கு கைங்கர்யம் செய்து கொண்டும், அவருடைய ஸ்ரீஸூக்திகளைப் பரவச்செய்து கொண்டும் இந்நிலவுலகிலே சில நாள் வாழ்ந்திருந்து, 'நம்புவார் பதி வைகுந்தம் காண்மினே' என்று தாம் அருளிச் செய்தபடியே பரமபதமடைந்து அங்கும் தேவு மற்றறியாதவராய் நம்மாழ்வாருக்கு தொண்டு செய்வதற்காக திருநாட்டுக்கு நடந்தருளினார்.

'ஆசார்யனுடைய கைங்கர்யமே பரமபதத்திலும் நமக்கு பேறு ஆகும். அதைப் பெறுவதற்கு உபாயமும் அவ்வாசார்யனுடைய அபி$_4$மானமே' என்பது இவரருளிச் செய்த கண்ணிநுண்சிறுத்தாம்பின் அரிய பெரிய ஸாரார்த்தமாகும். ஶரீர வியோகமானால், ஆசார்யன் திருவடியடைந்ததாகவிறே கூறுவது. 'உண்டபோது ஒரு வார்த்தையும் உண்ணாதபோது ஒரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேர் உண்டிறே; அவர்கள் பாசுரம் கொண்டன்று இவ்வர்த்தம் அறுதியிடுவது. அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவர் உண்டிறே; அவர் பாசுரம் கொண்டு இவ்வர்த்தம் அறுதியிடக் கடவோம்' என்ற ஸ்ரீவசநபூஷண (408, 409) சூர்ணைகளிலும் அவற்றின் வ்யாக்யானங்களிலும் இவ்வாழ்வாருடைய பெருமைகள் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. அவை இங்கு அநுஸந்தேயம்.

ஏரார் மதுரகவி யிவ்வுலகில் வந்துதித்த
சீராரும் சித்திரையில் சித்திரை நாள் – பாருலகில்
மற்றுள்ள வாழ்வார்கள் வந்துதித்த நாள்களிலும்
உற்றதெமக்கென்று நெஞ்சேயோர். – உப.ரத். 25

## மதுரகவியாழ்வார் வாழித் திருநாமம்

சித்திரையிற் சித்திரைநாள் சிறக்கவந்தோன் வாழியே
திருக்கோளூரவதரித்த செல்வனார் வாழியே
உத்தரகங்காதீரத் துயர்தவத்தோன் வாழியே
ஒளிகதிரோன் தெற்குதிக்க வுகந்துவந்தோன் வாழியே
பத்தியொடு பதினொன்றும் பாடினான் வாழியே
பராங்குசனே பரனென்று பற்றினான் வாழியே
மத்திமமாம் பதப்பொருளை வாழ்வித்தான் வாழியே
மதுரகவி திருவடிகள் வாழிவாழி வாழியே.

மதுரகவியாழ்வார் வைபவம் முற்றிற்று.

மதுரகவியாழ்வார் திருவடிகளே ஶரணம்.



தேவுமற்றறியேன் என்றிருக்கும் ஸ்ரீமாந்களான அதிகாரிகள்:

ஆழ்வார் திருமகளார் ஆண்டாள்
நம்மாழ்வார் திருவடிகளிலே ஸ்ரீமதுரகவிகள்
நாதமுனி திருவடிகளிலே குருகைக் காவலப்பன்
ஆளவந்தார் திருவடிகளிலே தெய்வவாரியாண்டான்
எம்பெருமானார் திருவடிகளிலே வடுகநம்பி
நம்பிள்ளை திருவடிகளிலே பின்பழகிய பெருமாள் ஜீயர்
வடக்குத் திருவீதிப்பிள்ளை திருவடிகளிலே கூரகுலோத்தமதாஸநாயன்
பிள்ளைலோகாசார்யர் திருவடிகளிலே மணல் பாக்கத்து நம்பியார்
திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகளிலே பெரிய ஜீயர்
பெரிய ஜீயர் திருவடிகளிலே எறும்பியப்பா.

– அந்திமோபாயநிஷ்டை[2]

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கண்ணிநுண்சிறுத்தாம்பு

(ஸ்ரீமந்நாதமுனிகள் அருளிச்செய்த தனியன்கள்)

அவிதி₃த விஷயாந்தரச் ஶடா₂ரே:
உபநிஷதா₃ம் உபகா₃ந மாத்ரபோ₄க₃: ।
அபிச கு₃ணவஶாத் ததே₃க ஶேஷீ
மது₄ரகவி: ஹ்ருத₃யே மமாவிரஸ்து ॥

அவிதித விஷயாந்தர: (நம்மாழ்வாரைத் தவிர) வேறொரு விஷயத்தையுமறியாதவரும், ஶடாரே: – நம்மாழ்வாருடைய (திவ்ய ஸூக்திகளாகிய), உபநிஷதாம் – திவ்ய ப்ரபந்தங்களை, உபகாந மாத்ர போக: – இசை பாடுவது ஒன்றையே பேரின்பமாகக் கொண்டவரும், குணவஶாதபிச – குணமடியாகவும், ததேகஶேஷீ – அந்த நம்மாழ்வார் ஒருவரையே தமக்கு ஶேஷியாகக் கொண்டவருமான, மதுரகவி: – மதுரகவியாழ்வார், மம ஹ்ருதயே – என் நெஞ்சில், ஆவிரஸ்து – ஆவிர்பவிக்கக்கடவர்.

ஆழ்வார், 'சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லா' என்று எம்பெருமானைத் தவிர வேறு ஒன்றையும் அறியாதிருந்தது போன்று மதுரகவிகளும் ஆழ்வாரைத் தவிர வேறு ஒருவரையும் அறியாதவர். இங்கு விஷயாந்தர: என்றது ஐம்புல இன்பங்களையன்று; பகவத் விஷயத்தை. அதாவது பாட்டு கேட்குமிடமான பரத்வத்தையும், கூப்பீடு கேட்குமிடமான வ்யூகத்தையும், குதித்தவிடமான விபவத்தையும், வளைத்தவிடமான அர்ச்சாவதாரத்தையும் குறித்தபடி. ஶடாரே: உபநிஷதாம் உபகாந மாத்ர போக: என்றதால் ஆழ்வாரோபாதி அவர் ஸம்பந்தமுடையதும் உத்தேஶ்யம் என்றபடி. அவிதித விஷயாந்தரச் ஶடாரே: என்று ஸ்வரூப ப்ரயுக்தமான தாஸ்யம் சொல்லிற்று. அபிச குணவஶாத் ததேகஶேஷீ என்றதால் குணக்ருத தாஸ்யமும் உண்டென்கிறது. 'அன்னையா யத்தனாய் என்னையாண்டிடும் தன்மையான்' என்றும் 'பயனன்றாகிலும் பாங்கலராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்' என்றும் அநுஸந்தித்த வாத்ஸல்யாதி குணங்கள். ஏவம்பூதரான மதுரகவிகள் என் மனஸ்ஸிலே ஸந்நிதாநம் பண்ணக் கடவர். இத்தால் அநுகூலரான ஆசார்யர்களுக்குப் பரதந்த்ரப் பட்டிருக்குமவர்கள் ஆதரணீயர் என்னுமர்த்தம் சொல்லிற்று.

வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ்செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர் – ஏறெங்கள்
வாழ்வா மென்றேத்தும் மதுரகவியாரெம்மை
ஆள்வாரவரே யரண்.

'ஆழ்வாரைத் தவிர வேறு ஒரு பொருளையும் நானறியேன்' என்றும், வேதங்களின் உண்மைப் பொருள்களைத் தமிழிலே அருளிச்செய்த மாறன் எனும் திருப்பெயரை யுடையவரும், திருக்குருகூருக்குத் தலைவருமான ஆழ்வார், எங்களுக்கு வாழ்வாம் – பேறு ஆவர் என்றும் துதித்த மதுரகவிகள் எம்மை அடிமை கொள்பவர்; அவரே ப்ரபந்ந ஜந குலத்துக்கு காவலாக இருப்பவர்.

ஆழ்வாரையொழியத் தேவு மற்றறியாத மதுரகவிகளே நம்மை ஆள்கின்றவரும், நமக்கு அரணாக இருப்பவருமாவர் என்றபடி. அரண் – ரக்ஷை.

'வேதம் தமிழ் செய்த' என்றது 'தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே' என்றபடி வேதங்களில் எளிதில் காணவொண்ணாது மறைந்து கிடக்கிற தத்துவப் பொருள்களையெல்லாம் எடுத்து தெளிவுபடத் தெரிவித்தபடியைச் சொல்கிறது. 'மேகம் பருகின ஸமுத்ராம்பு போலே நூற்கடல் சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வ உபஜீவ்யமாமே' என்பது ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தி. வண்குருகூர் – திருவாய்மொழியைத் தந்த வண்மையைக் குறிக்கிறது. 'யாம் உறாமை' என்று ஆழ்வார் அருளிச் செய்ததுபோல், தம்மைப் போன்ற பரமபாகவதர்களையும் கூட்டிக் கொண்டு 'எங்கள் வாழ்வு' என்று பன்மையால் கூறுகிறார். பரம வைஷ்ணவராகையால் உலகத்துக்காக தாம் மன்றாடுகிறபடி.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

★ ★ ★

ஆசார்யர்களெல்லாரும் சேரவிருந்து 'எங்கள் ஶிஷ்யர்கள் உம்மை ஸேவிக்கைக்கு அடியென்' என்று ஆச்சான்பிள்ளையைக் கேட்க, 'உங்களுக்குப் போகாதே இருப்பதொன்றுமாய் இவர்களுக்கு அபேக்ஷிதமாயிருப்பதொரு அர்த்தம் எனக்குப் போம். நீங்கள் த்வயத்தை உபதேஶித்து பெருமாளுடைய ஏற்றத்தையும் அருளிச் செய்திகோள். உங்களுடைய ஏற்றம் உங்களுக்குப் போகாது. அது நான் சொல்லவல்லேன்' என்றருளிச் செய்தார்.

வைராக்$_3$யத்தில் விஞ்சின லாபமில்லை. ஜ்ஞானத்தில் விஞ்சின ஸுக$_2$மில்லை. ஸம்ஸாரத்தில் விஞ்சின து$_3$:க$_2$மில்லை. ஆசார்யனில் விஞ்சின ரக்ஷகரில்லை.

– ப்ரமேயரத்நம்

**அவதாரிகை:** *ஶ்*ரிய:பதியாய், அவாப்த ஸமஸ்த காமனாய், ஸமஸ்த கல்யாண குணாத் மகனாய், உபயவிபூதி யுக்தனாயிருக்கிற ஸர்வேஶ்வரன், ஒரு விபூதியிலுள்ளார் நிரந்தர அநுபவஜநித நிரதி*ஶ*யானந்த த்ருப்தராய்ப் போருகிறபடியையும், ஒரு விபூதியிலுள்ளார் அஜ்ஞான இருளிலே மூழ்கி, அந்யதாஜ்ஞான விபரீத ஜ்ஞானங்களாலே அபுருஷார்த்தங்களில் அதிப்ரவணராய், ஆத்மாநுரூபமான புருஷார்த்தத்தில் அத்யந்த விமுகராய், கர்ப்ப நரகாதி ஸகல க்லேசங்களாலும் வ்யாகுலராய்ப் போருகிறபடியையும் கண்டு, இருளிலே திரிவார்க்கு கைவிளக்கு கொடுப்பதுபோலே, *'மாநும் ப்ரதீ$_3$பமிவ காருணிகோ த$_3$த$_3$ாதி' என்கிறபடியே நிர்தோஷமான வேதத்தை ப்ரகாசிப்பிக்க, கண்நோய் உள்ளவனுக்கு தீப ப்ரகாசம் ஆகாதவோபாதி பகவத் பக்தியாகிற ஸித்தாஞ்ஜநத்தாலே ஆந்தர சக்ஷுஸ்ஸான நெஞ்சின் குருடு தீராமையாலே அதுவும் அகிஞ்சித்கரமாக, 'இதிஹாஸ புராணாப்$_4$யாம் வேத$_3$ம் ஸமுப ப்$_3$ரும்ஹயேத்' என்று வேதோப ப்ரும்ஹணமான ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களை ரிஷிகள் மூலம் ப்ரவர்த்திப்பிக்க அதுவும் கார்யகரமாகாமையாலே, 'நாமே சென்று ஸம்ஸாரிகளை திருத்தக்கடவோம்' என்று ராமக்ருஷ்ணாத் யவதாரமுகத்தாலே இவர்கள் இருக்கிறவிடத்திலே தானே வந்து திருத்தப்பார்த்தவிடத்திலும் ஒருவரும் திருந்தக் காணாமையாலே 'விஜாதீயரான நம்மால் திருத்தவொண்ணாது; ம்ருகத்தை ம்ருகம் கொண்டு பிடிப்பாரைப்போலே ஸஜாதீயரைக் கொண்டு கார்யம் கொள்ள வேணும்' என்று தன்னுடைய நிர்ஹேதுக ப்ரஸாதத்துக்கிலக்காக ஆழ்வார்களை அவதரிப்பித்தான். ஸர்வே*ஶ்*வரனாலே மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களும், ஸகல ஸம்ஸாரிசேதனரும் த்யாஜ்ய-உபாதேய விபாகம் பண்ணி உஜ்ஜீவிக்கைக்குடலாக ஸர்வாதிகாரமான திவ்யப்ரபந்தங்களை யருளிச்செய்து ஜகத்தை வாழ்வித்தார்கள்.

பகவத்பரராய் பகவத் வைபவத்தை ஸம்ஸாரிகள் அறியும்படி புராணமுகங்களாலே உபதே*ஶி*த்துப் போந்த ரிஷிகளிற்காட்டில் ஆழ்வார்களுக்கு நெடுவாசியுண்டு. ரிஷிகள் பரமபுருஷார்த்தமான பகவத் ப்ராப்தியையும், ப்ராப்தி ஸாதனமான உபாஸனத்தையும் உபதே*ஶி*க்கச் செய்தே, *ஶ*ாஸ்த்ர மர்யாதையிலே ஐ*ஶ்*வர்யாதி புருஷார்த்தங்களையும் கலந்தகட்டியாக உபதே*ஶி*த்துப் போந்தார்கள். ஆழ்வார்கள் *ஶ*ாஸ்த்ர தாத்பர்யமாய் உத்தம புருஷார்த்தமான பகவத் ப்ராப்தியிலே நிஷ்டராய், பிறர்க்கு உபதே*ஶி*க்குமிடத்தில் 'பகவத் ப்ராப்திக்கு ஸாதனம் அவன் திருவடிகளே' என்றும் 'வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்' என்றும் ஐ*ஶ்*வர்யாதிகள் த்யாஜ்யம் என்றும் உபதே*ஶி*க்குமவர்கள்.

இவ்வாழ்வார்களுக்கும் மதுரகவியாழ்வார்க்கும் நெடுவாசியுண்டு. உத்தம புருஷார்த்தமான பகவத் ப்ராப்தியிலே நின்றார்கள் ஆழ்வார்கள். இப்புருஷார்த்தத்தின் காஷ்ட்டையான (எல்லை நிலமான) ததீய *ஶே*ஷத்வத்திலே நின்றார் ஸ்ரீமதுரகவிகள்.

---

* காருணிகனான எம்பெருமான் (அஜ்ஞானமாகிற இருளை நீக்க) விளக்குபோலே சாஸ்த்ர ப்ரமாணத்தை கொடுத்தருள்கிறான். – ஸ்ரீர.ஸ்.உ.*ஶ*-1

ஆழ்வார்களில் தலைவரான நம்மாழ்வார் திருத்துழாய் முளைக்கும்போதே மணத்தோடே அங்குரிக்குமாபோலே, திருவவதாரம் தொடங்கி லௌகிக-ஜ்ஞாந பூர்வகமான ப்ரவ்ருத்தி லேசமுமின்றி 'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்' என்கிறபடியே தாரக போஷக போக்யங்கள் யாவும் எம்பெருமானேயாய் தத்குணாநுபவமே யாத்ரையாய் வளர்ந்து போந்தார் ஒருவராய்த்து. 'என்னப்பன்தன் மாயங்களே நினைக்கும் நெஞ்சுடையேன் எனக்கினி யார் நிகர் நீணிலத்தே' என்கிறபடி இவ்வாழ்வாருக்கு ஒப்பு சொல்லவல்லார் ஸம்ஸாரத்திலுமில்லை; நித்யவிபூதியிலுமில்லை. பகவத் அநுபவத்துக்குப் பாங்கான தேசத்திலேயிருந்து அநுபவிக்கும் நித்யஸூரிகளைப் போலன்றி அவ்வநுபவத்துக்கு மேட்டுநிலமான ஸம்ஸாரத்திலேயிருந்து அநுபவிக்குமிவர் 'விண்ணுலாரிலும் சீரியரே'. இவரைப் போலே விலக்ஷணராயிருப்பாரை ஸம்ஸார மண்டலத்திலே காணாமையாலே ஸம்ஸாரிகளும் அறியார்கள். ஒரு ஸாதனத்தையநுஷ்டித்து 'இந்த நன்மை நமக்கு வரும்' என்றிருக்க வந்ததல்லாமையாலே தம்படியைத் தாமுமறியார். தன் குணங்கள் புறம்பே ஒரு வ்யக்தியில் இப்படி பலிக்கக் காணாமையாலே ஸர்வேஶ்வரனும் அறியான். 'புவியும் இருவிசும்பும் நின்னகத்த நீ என் செவியின் வழி புகுந்து என்னுள்ளாய் *அவிவின்றி யான்பெரியன் நீ பெரியை என்பதனை யாரறிவார்' – விபூதியையுடைய நீயோ, விபூதிமானையுடைய நானோ பெரியவன் என்றறிவாரில்லை – என்று உபயவிபூதியுக்தனோடே மறுதலைக்கும்படியான வைபவத்தையுடையவர். இவ்வாழ்வார் அவதரித்தது ஸம்ஸாரி சேதனர் பண்ணின ஸுக்ருதப$_2$லமாய்த்து. அச்யுதபாநுவினுடைய ஆவிர்பாவத்திலும் விகஸியாத ஹ்ருத்பத்மங்களும் விகஸிக்கும்படி உள்ளிருளான அஜ்ஞாநாந்தகாரம் நீங்கினது வகுளபூஷண பாஸ்கரோதயமான பின்பிறே.

இப்படி அஜ்ஞாநாந்தகாரம் கழிந்து எல்லோரும் பகவத்பரராம்படி அவதரித்த இவ்வாழ்வார் விஷயத்திலே 'தேவு மற்றறியேன்' என்று ஶேஷித்வ, ஶரண்யத்வ, ப்ராப்யத்வங்களை அறுதியிட்டு தத்ஏக நிஷ்டராய்ப் போருமவராய்த்து ஸ்ரீமதுரகவிகள்.

ஆழ்வார் 'பொய்நின்ற ஞானம்' தொடங்கி 'அவாவற்று வீடுபெற்ற' என்னுமளவும் செல்ல அநுபவித்தவிடத்தில், தமக்கு உத்தேஶ்யமாக †'பயிலும் சுடரொளி' 'நெடுமாற்கடிமை'யிலே புருஷார்த்த காஷ்ட்டையான ததீய ஶேஷத்வத்தையே அறுதியிடுகையாலே ஆழ்வாருடைய ருசிபரிக்ருஹீதமான அர்த்தத்தையே தமக்குப் புருஷார்த்தமாக அத்யவஸிக்கிறார் ஸ்ரீமதுரகவிகள்.

ஸ்ரீபிஷ்மர் பக்கலிலே ஸகலார்த்தங்களையும் கேட்ட தர்மபுத்ரன் 'பீஷ்மர் தமக்கு உத்தேஶ்யமாக ஸ்வீகரித்த தத்வஹிதங்களே நமக்கும் உத்தேஶ்யம்' என்று

* இடையறாது

† 'பயிலும் சுடரொளி'யில் பாகவதர்கள் ஶேஷிகள் (நாதர்) என்றது; 'நெடுமாற்கடிமை'யில் பாகவதர்கள் போ$_4$க்$_3$யர் (இனியர்) என்றது.

நினைத்து, 'கோத$_4$ர்ம ஸர்வத$_4$ர்மாணாம் ப$_4$வத: பரமோமத:' எல்லா அறங்களிலும் எந்த அறம் மிகச்சிறந்ததென்று தேவரீர் நினைக்கிறீர் என்ன, 'ஏஷமே ஸர்வ த$_4$ர்மாணாம் த$_4$ர்மோதி$_4$கதமோ மத:' - தாமரைக்கண்ணனை துதிகளால் அர்ச்சிப்பதே எல்லா அறங்களிலும் மேலானது என்பது என் நினைவு - என்று தனக்கு ருசித்த அர்த்தத்தை யுபதேஶித்தாரிறே. *த்ரிபுராதேவியாரை 'எம்பெருமானே ஆஶ்ரயணீயன்' என்று நீங்கள் பற்றியது ப்ரமாண ப்ராபல்யத்தாலேயோ? என்ன, 'அதுவொன்றுமன்று; எம்பெருமானார் காடிச்சால்மூலையில் தேவதையை ஆஶ்ரயித்தாராகில் அதுவே எங்களுக்கும் ஆஶ்ரயணீய வஸ்துவாகக் கடவது' என்றாள். † சதுச்சாஸ்த்ர வித்வானான கூரத்தாழ்வான் நாம் தேவதாந்தர பஜனம் பண்ணாத காரணத்தை சாஸ்த்ரங்களைக் கொண்டு மூதலிக்காமல், 'எங்கள் முன்னோர் தேவதாந்தர பஜனம் பண்ணாமையாலே' என்றருளிச் செய்தாரிறே. ஆக, ஆசார்ய ருசி பரிக்ருஹீதமான அர்த்தமே ஸாத்விகர்க்கு பரிக்ராஹ்யம்.

ஶ்ரீராமாயண புருஷர்கள் நால்வரும் நாலு தர்மத்தை யனுஷ்டித்துக் காட்டினார்கள். 'ஒருவன் சொன்னதை ஒருவன் செய்யக்கடவன்' என்கிற தர்மம் நேராக அழிந்து கிடக்கையாலே ஸாமாந்ய தர்மத்தை யநுஷ்டித்தார் பெருமாள். 'பிதுர்வசன நிர்தேஶாத்' 'அகஸ்த்ய வசநாத்' 'ஸுக்ரீவ வசநாத்' 'ஸமுத்ர வசநாத்' என்றிறே இவர் அநுஷ்டானம். ஶேஷபூதன் ஶேஷியைக் குறித்து கிஞ்சித்கரிக்கக் கடவன்' என்கிற விஶேஷ தர்மத்தையநுஷ்டித்தார் இளையபெருமாள். 'குருஷ்வ மாம் அநுசரம்' 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' 'ஸ ப்$_4$ராது:' என்றிறே இவருடைய அநுஷ்டானம். வநவாஸத்தைக் கேட்டு கோபமுற்ற இளையபெருமாள் பாசுரம்: "ராஜ்யஞ்ச தவரக்ஷேயம் அஹம் வேலேவ ஸாக$_3$ரம் । ப்ரதிஜாநாமி தேவீர மா பூ$_4$வம் வீரலோக ப$_4$ாக் ॥ 'கடலுக்கு கரைபோலுள்ள நான் உமது அரசை ரக்ஷிக்கக் கடவேன். அவ்வாறு செய்யாவிடில் உம் ராஜ்யத்தில் வாழக்கடவேனல்லேன்; வீரரான தசரதர் சென்ற உலகிற்கு செல்லக்கடவேன் என்று ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன்.' இப்படி ஶேஷியை நிர்ப்பந்தித்து அடிமை செய்தார் இளையபெருமாள். இப்படி நிர்ப்பந்தித்து அடிமை செய்கையன்றிக்கே 'ஶேஷி உகந்த அடிமை செய்யக்கடவது' என்னுமிடத்தையநுஷ்டித்தார் ஶ்ரீபரதாழ்வான். பெருமாளை ராஜ்யத்துக்கு திருப்பி அழைத்துச் செல்ல வந்தவன், தன் ஆற்றாமையைப் பாராதே ஶேஷியினுடைய ஹ்ருதயத்தையே பார்த்து 'ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:' என்று தன் பாரதந்த்ர்யம் ஜீவித்தது என்ற ப்ரீதியோடே மீண்டானிறே. இப்படியிருக்கிற இவனையல்லது அறியாதேயிருக்கையாலே, பகவச்சே$_2$ஷத்வ காஷ்ட்டையான ததீய சேஷத்வத்தை யநுஷ்டித்தார் ஶ்ரீஶத்ருக்நாழ்வான். 'க$_3$ச்சதா மாதுலகுலம் ப$_4$ரதேந த$_3$தாந$_4$க:, ஶத்ருக்னோ நித்ய ஶத்ருக்னோ நீத: ப்ரீதி புரஸ்க்ருத:' என்கிறபடி யுதாஜித் அழைத்தது பரதனையேயாகிலும் பரதனைவிட்டு ஜீவிக்கமாட்டாது,

---

* த்ரிபுராதேவியார் ராஜபத்நி - உடையவர் சிஷ்யன் அகளங்க ப்ரம்மராயன் மனைவி. காடிச்சால் - தீர்த்தம் சேர்த்த பழைய ப்ரஸாதத்தை வைக்கும் பானை. காடிச்சால் மூலை - அப்பானையை வைக்கும் ஈசாந்ய திக்கு (வடகிழக்கு மூலை). இங்கு 'காடிச்சால் மூலை தேவதை' என்று ருத்ரனைச் சொன்னபடி.

† வேதாந்தம், தர்க்கம், வ்யாகரணம், மீமாம்ஸை இவையே சதுச்சாஸ்த்ரங்கள்.

பரதனாகிற த்ரவ்யத்திலேயுள்ள ஜாதி குணங்களோபாதி தானும் பரதனோடே கூடப்போனான். 'ஜ்யேஷ்டாநுவர்த்தி கர்த்தவ்யம்' என்றன்றி ஸர்வஶேஷவ்ருத்தியும் பண்ணலாம் என்று ப்ரீதி ப்ரேரிக்கப் போனான். இப்படி ஸ்ரீஶத்ருக்நாழ்வானைப் போலே தமக்கு உபகாரகரான ஆழ்வார் தம்மையே பற்றியிருப்பார் ஒருவராய்த்து ஸ்ரீமதுரகவிகள்.

'த்ரைகு₃ண்ய விஷயாவேத₃ா:' என்கிறபடி வேதங்கள் குணத்ரய வஶ்யர்க்கு குணாநுகுணமாக ப₂லங்களைச் சொல்லும். அங்ஙனன்றிக்கே, பகவத் குணங்களையே ப்ரதிபாதிக்குமது திருவாய்மொழி. வேதம் போல் அனந்தமாய், திருவாய்மொழிபோல் ஆயிரம் பாட்டாய் இல்லாமல், ஸுக்ஷ்மமாய் ஆழ்வாருடைய திவ்யகுணங்களையே ப்ரதிபாதிப்பது கண்ணிநுண்சிறுத்தாம்பு. திருவாய்மொழி வேதஸாரமென்னா, திருவாய்மொழியின் ஸாரமாய்த்து கண்ணிநுண்சிறுத்தாம்பு.

ஒரு முமுக்ஷுவுக்கு ஆதரணீயராயிருப்பார் நாலு வ்யக்திகள். ஸர்வேஶ்வரனும், பிராட்டியும், ஆசார்யனும், ஸ்ரீவைஷ்ணவர்களும். அதில் தன் க்ருபையாலே கரணகளே ப₃ரங்களைத்தந்து அந்தர்யாமியாய்நின்று, அத்வேஷ ஆபிமுக்யத்தைப் பிறப்பித்து, ஸதாசார்யனோடே சேர்த்து, அபராதங்களைப் பொறுத்து, ஸம்ஸார ஸம்பந்தத்தைக் கழித்து அர்ச்சிராதி மார்க்கத்தையும், பரமபதத்தையும், குணாநுபவத்தையும் தந்து யாவதாத்மபாவி நித்யகைங்கர்யம் கொள்ளும் ஸ்வாமி ஸர்வேஶ்வரன். மாதாவாய், புருஷகாரபூதையாய், ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்தையும் குலைத்து, அவனுடைய காருண்ய வாத்ஸல்யாதிகளைக் கிளப்பி, ஸர்வாபராதத்தையும் பொறுப்பித்து, கைங்கர்ய வர்த்தகையாய், ஸ்வாமிநியாய், ப்ராப்யையாய் இருக்கும் பிராட்டி. குற்றம் பார்த்துக் கைவிடாதே தன் கடாக்ஷத்தாலே திருத்தி, ஹிதமான பகவத் விஷயத்தையும் பிராட்டி வைபவத்தையும் உபதேஶித்து, தான் அநுஷ்டித்துக்காட்டி இவனையநுஷ்டிக்க வைத்து, ஸர்வேஶ்வரன் கைக்கொள்ளுகைக்கு யோக்யனாம்படி பண்ணி அவன் திருவடிகளிலே சேர்த்து, இவன் க்ருதஜ்ஞதையடியாகப் பண்ணும் கிஞ்சித்காரங்களுக்கு ப்ரதிஸம்பந்தியாயிருந்து அடிமைகொள்ளும் மஹோபகாரகன் ஆசார்யன். ப்ரதமத்திலே ருசிஜநகராய், ஆசார்யோபதிஷ்டமான ஜ்ஞானபக்தி வைராக்யங்கட்கு வர்த்தகராய், உசாத்துணையாய், இவனுக்கு ப்ரக்ருதி வச்யதையாலே சில ஸ்காலித்யங்கள் பிறந்தாலும் அத்தை தெளியப்பண்ண வல்லவர்களாய் ஆசார்ய ப்ரேமத்தை அபிவ்ருத்தமாக்குமவர்களாய், ப்ராப்யத்துக்கு எல்லை நிலமாயிருப்பவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள். இவற்றை ஶ்ருதியும், 'மாத்ரு தேவோ பவ', 'பித்ரு தேவோ பவ', 'ஆசார்ய தேவோ பவ', 'அதிதி தேவோ பவ' என்று சொல்லி வைத்தது. இங்கு அதிதியாகிறான் ஸ்ரீவைஷ்ணவனாய்த்து. இனி, இந்நால்வரில் அத்யந்த ஆதரணீயர் யாரென்னில் – ஸ்ரீவைஷ்ணவர்களுடைய வைபவ ஜ்ஞானம், பிராட்டியினுடைய வைபவ ஜ்ஞானம், ஈஶ்வரனுடைய ஸர்வ ப்ரகார வைபவ ஜ்ஞானம் இவை யாவும் ஆசார்ய அங்கீகார அநந்தரமாகையாலே விசேஷேண ஆதரணீயன் ஆசார்யனேயாய்த்து.

ஸ்ரீமதுரகவிகள் அவ்வாசார்ய வைபவம் அறியுமவராகையாலே, ஆழ்வார் திருவழுதியிலே திருவாய் பிள்ளை பண்ணி அவருடைய ப்ரபந்த பாத்ரமாய் சேர்ந்தவராகையாலும், அவர் பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் உண்டாக நினைத்திருந்தவராகையாலும், அவரை வாயாரப் புகழ்ந்து அவருடைய உபகார அநுஸந்தான ப்ரீதிக்கு போக்குவீடாக இப்ப்ரபந்த முகேன ஆழ்வார் வைபவத்தைப் பேசுகிறார். ஈச்வரனை ஆராதிக்கைக்கு திருவிருத்தம் தொடக்கமான நாலு ப்ரபந்தம் வேண்டிற்று. ஆழ்வாரை ஆராதிக்கைக்கு இப்பத்து பாட்டுமே அமைந்தது.

'ஆசார்ய தேவோ பவ' என்று ஆசார்ய விஷயத்தில் தேவதா ப்ரதிபத்தி பண்ணச் சொல்லி வேதாந்தம் விதிக்கையாலும், 'குரூர் ஏவ பரம் ப்ரஹ்ம' என்றும், 'ஆசார்யஸ்ய ஹரிஸ் ஸாக்ஷாச் சரரூபீ ந ஸம்ஶய:' என்றும், 'ஸாக்ஷாந் நாராயணோ தே₃வ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்₃நாந் உத்₃த₄ரதே லோகாந் காருண்யாத் ஶாஸ்த்ர பாணிநா' என்றும் ப்ரமாணங்கள் ஸர்வேஶ்வரன்தானே ஆசார்யனாய் வந்தவதரித்து ஸம்ஸாரார்ணவ மக்நரான ஸம்ஸாரி சேதனரை கேவலம் தன் க்ருபையாலே ஶாஸ்த்ரார்த்தங்களை யுபதேஶித்து உத்தரிப்பிக்கும் என்று சொல்லுகையாலும் பரமாசார்யரான ஆழ்வார் விஷயத்திலே 'தேவுமற்றறியேன்' என்று தேவதா ப்ரதிபத்தி பண்ணினார் ஸ்ரீமதுரகவிகள்.

ஈஶ்வரன் க்ருதயுகத்தில் ப்ராஹ்மணோத்தமரான அத்ரி பகவானுக்கு புத்ரனாய் தத்தாத்ரேயனாய் வந்தவதரித்தான். த்ரேதாயுகத்தில் க்ஷத்ரியனான த₃ஶரத சக்ரவர்த்திக்கு புத்ரனாய் வந்தவதரித்தான். த்வாபர யுகத்தில் கோ₃ ரக்ஷணாதி தர்மத்தையுடைய ஸாக்ஷாத் வைஶ்யரான ஸ்ரீநந்தகோபருக்கு புத்ரனாக வந்தவதரித்தான். கலியுகத்தில்,

'கலௌ கலு ப₄விஷ்யந்தி நாராயண பராயணா:
க்வசித்க்வசித் மஹாப₄ாக₃ா த்₃ராமிடே₃ஷு ச பூ₄ரிஶ: ।
தாம்ரபர்ணீ ந₃தீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ
காவேரீ ச மஹாப₄ாக₃ா ப்ரதீசீ ச மஹாநதீ₃ ॥
யே பிப₃ந்தி ஜலம் தாஸாம் மநுஜா மநுஜேஶ்வர
தேஷாம் நாராயணே ப₄க்திர் பூ₄யஸீ நிருப₄த்ரவா ॥'

என்று பாகவதத்தில் ஆழ்வார்களின் அவதாரங்களைப் பற்றியும், ப்ரதமத்தில் ஆழ்வார் ஆவிர்ப்பாவ ஸ்தலத்தையும் சொல்லியுள்ளபடி தத்வித் அக்ரேஸரராய், ஸகலஜந ஜீவாதுவாய் காரியாரிடத்திலே வந்தவதரித்த ஸ்ரீஶடகோபன் ஸர்வோத்தாரகமான பகவத் அவதார விசேஷம் என்றறுதியிட்டு அவரே பரதேவதை என்று பற்றினாராயிற்று ஸ்ரீமதுரகவிகள். ஆசார்ய அவதாரமும் ஈஶ்வர க்ருத்யமாமத்தனை. 'ஸம்ப₄வாமி யுகே₃ யுகே₃' என்று வாயோலை செய்தது ஆசார்யவதாரத்தையொழிய வன்றிறே. ஆசார்ய விஷயத்தில் மநுஷ்யத்வ ப்ரதிபத்தி பண்ணினவனுக்கு நரகமே ப₂லமாக ஶாஸ்த்ரம் சொல்லிற்று. 'ஸித்₃தி₄ர் ப₄வதி வா நேதி ஸம்ஶயோச்யுத ஸேவிநாம் ந ஸம்ஶயோஸ்தி தத் ப₄க்த பரிசர்யா ரதாத்மநாம்'

என்கிறபடி ஆசார்யனையே ப்ராப்ய ப்ராபகங்களாகப் பற்றி நிர்ப்ப₄ரராயிருப்பார்க்கு வேறில் கண்ணழிவு இல்லை. ஆழ்வார் பகவத் விஷயத்தில் பண்ணும் அநுஸந்தான ப்ரகாரத்தை இவர் ஆழ்வார் விஷயத்தில் பண்ணினார்.

பகவத் விஷயம் - 'ரஸோ வை ஸ: லப்த்வ ஆனந்தீ பவதி' (பரமபுருஷன் ஆனந்த ஸ்வரூபன்; அவனையடைந்து (இந்த ஜீவன்) ஆனந்தமடைகிறான்) 'வீவிலின்பம் மிகவெல்லை நிகழ்ந்தனம் மேவியே' என்கிறபடியே ஸாக்ஷாத் அபிமதமாய், தானே ஸாதனமாயிருக்கும் ரஸ வஸ்துவாகையாலே 'வைகுண்ட சரணாம்போஜ ஸ்மரணாம்ருத ஸேவிந:' 'பாதேயம் புண்டரீகாக்ஷ நாம ஸங்கீர்த்தநாம்ருதம்' என்கிறபடி ஸ்மரித்தும், ஸங்கீர்த்தனம் பண்ணியும் ரஸிக்கக்கடவதாயிருக்கும். அதன் போக்யதையைப் பார்க்குங்கால், ஶப்தாதி விஷயங்களின் போக்யதை அத்யல்ப்பமாய் அடிபட்டுப்போம். ஸ்ரீமதுரகவிகளுக்கு ஆழ்வாருடைய போக்யதையைப் பார்க்குங்கால் அது பகவத் போக்யதையிலும் விஞ்சியிருந்தது.

பகவத் விஷயம் பராவஸ்தையில் ஷாட்குண்ய பூர்ணையாய், அவதார அவஸ்தையில் ஸௌஶீல்யாதி குணபூர்ணையாயிருக்கும். அவற்றில் பராவஸ்தை பாற்கடல் ஸ்தானத்திலேயாய், அவதார அவஸ்தை அம்ருத கலசம் போலேயாயிருக்கும். அவ்வதாரங்கள் தன்னிலும் க்ருஷ்ணாவதாரம் அத்யந்த போக்யமாயிருக்கும். க்ருஷி என்று க்ருஷி விஷயமான பூமியைச் சொல்லி, ண: என்று ஆனந்தத்தைச் சொல்லி, ஆனந்தத்துக்கு விளைநிலமாயிருப்பதால் க்ருஷ்ணன் - ஸுககரமான வ்யக்தி என்றபடி. அக்ருஷ்ணாவதாரம் தன்னிலும் கம்ஸவதத்துக்கு பின்பான சரிதங்கள் கழியுண்டு, நவநீத சௌர்யமும், நகர க்ஷோப₄மும் (பரபரப்பு) பண்ணின முக்தப்ராய அபதானங்களே த்ருஷ்டி சித்தாபஹாரியாயிருக்கும். உறிகளில் வெண்ணெயோடு அறைகளில் பெண்களோடு வாசியற இரண்டையும் களவு கண்டு போந்த சரித்ரமிறே போக்யதமமாயிருப்பது. குணங்கண்டு உகக்க ராமவிஷயம் என்னா, தீம்பு போக்யமாயிருப்பது க்ருஷ்ண விஷயத்திலேயிறே. ஸர்வாதிக பரிபூர்ணமான வஸ்து ப்ராக்ருத பதார்த்தமாயிருப்பதொரு வெண்ணெயை ஆசைப்படவும், அதைக்களவு காண்கையும், ஸர்வஜ்ஞமான வஸ்து அத்தை மறைக்கமாட்டாமல் வாயது கையதாக அகப்படுகையும், ஸர்வ ஶக்தியானது ஓரிடைச்சி கையிலே கட்டுண்டு உரலுக்கும் தனக்கும் ஒரு வைஷம்யமறவிருந்து கட்டையவிழ்க்க மாட்டாதே விம்மல் பொருமல் அழுகையுமான இந்த ஸௌசீல்யம் அத்யந்த அநுபவமாய்த்திருப்பது. 'தறியார்ந்த கருங்களிறே போல நின்று தடங்கண்கள் பனிமல்கும் தன்மையானை' என்று இவ்வபதானத்திலிறே ஆழ்வார்கள் ஆழங்காற்படுவது.

ஆழ்வார் 'எத்திறம்' என்று மோஹித்த அபதானத்தை அநுஸந்திக்கச் செய்தே, அதில் கால்தாழாதே அதிலுங்காட்டில், ஈஶ்வரனாலே ஆழ்வார் கட்டுண்டிருந்தவிருப்பு தமக்கு போக்யமாயிருக்கிறபடியை யருளிச் செய்கிறார் முதல் பாசுரத்தில். அவன் கட்டுண்டது கோபிமார் ஏசுகைக்கு உறுப்பாயிற்று. இவர் கட்டுண்டது நாட்டாருடைய கட்டை அவிழ்க்கைக்குறுப்பாய் பரமஸாத்விக வர்க்கத்துக்கு போக்யமாய்த்து.

1. கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெருமாயன் என்னப்பனில்
நண்ணித் தென்குருகூர் நம்பியென்றக்கால்
அண்ணிக்கும் அமுதூறும் என்னாவுக்கே.

கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன் – ஆழ்வாரைப் பற்றுகிற இவர் ப்ரதமாவதியான பகவத் விஷயத்தில் இழிவானென் என்னில் – ஆழ்வாருடைய போக்யதாதிஶயம் தோற்றுகைக்காகவும், ஆழ்வாருடைய முக மலர்த்திக்காகவும், அவர் உகக்கும் பகவத் விஷயமாகையாலும், அவர் ஆழங்காற்பட்ட விஷயமாகையாலும்.

கண்ணிநுண்சிறுத்தாம்பு – கட்டின கயிற்றைக் கொண்டாடுகிறார். ஆழ்வாருடைய உத்தேஶ்ய வஸ்துவை ஸ்பர்ஶித்ததொரு தாம்பினுடைய உள்மானம் புறமானம் ஆராயும்படியாய்த்து. கண்ணித்தாம்பு – பலவிடங்களில் அற்று, பல கண்ணிகளை (முடிகளை) யுடைத்தான கயிற்றாலாயிற்று இவனைக் கட்டியது. கட்டுவது, விடுவது, கறப்பது, கடைவதாகப் பணிபோருமித்தனை போக்கி இடைச்சிக்கு தரமான கயிறு கொள்ள அவகாஶமில்லை. நல்ல கயிறுகள் கன்றுகாலிகளை கட்டுகைக்கு போகவே, ஒன்றுக்குதவாத கயிறையிட்டாயிற்று இவனைக் கட்டுவது. அநந்யமாயிருப்பதொரு பாசத்துகிறே இவன் அகப்படுவது! இவனைச் சேர்த்து கட்டின உரலும் பொத்தவுரலாயிற்று. அநந்யார்ஹர்க்கிறே அவன் உடம்பு கொடுப்பது!

நுண்தாம்பு – நுண்ணிய தாம்பு. உடம்பிலே அமுந்தும்படியான ஸூக்ஷ்மமான கயிறாய்த்து. இவனைக் கட்டும் பாசம் ஸூக்ஷ்மமாயிருக்க வேணுமே! *இன்றும் அமுந்திக்கிடக்கிறதிறே!

சிறுத்தாம்பு – எட்டம் போராமல் இவன் வயிற்றை எக்கச் சொல்லி கட்டவேணும்படியான சிறுகயிறு.

கட்டுண்ணப் பண்ணிய – சிறுத்தாம்பை நெடுக்கவொண்ணாது. சேர்த்துக் கட்டுகிற உரலைச் சுருக்கவொண்ணாது. இனி இவனைவிட்டு நெடுகயிறு எடுக்கப்போகில், பின்னை இவன்தான் எட்டான்; காற்றில் கடியனாய் ஓடும். இனிச் செய்வதென் என்று தடுமாறினாள். இனி இடம்பெறுவது இவன் பாடேயாகையாலே, வயிற்றை எக்கச் சொல்லி இடங்கண்டு கட்டினாளாய்த்து. தன் ஸங்கல்பத்தால் இடம் கொடுக்கையன்றிக்கே, தாயின் சீற்றத்துக்கஞ்சி பிள்ளைத்தனத்தால் கட்டுண்ணப் பண்ணினான்.

---

* தாமோதரன் (திருப்.5) – கண்ணணின் உடை சிறிது நழுவ, தாம்பினால் கட்டுண்டு ஏற்பட்ட தழும்பைக் கண்டு கோபிமார்கள் சிரித்தார்கள். அது தோன்றாமைக்கிறே நம்பெருமாள் கணையம் மேல் சாத்துகிறது! என்று நஞ்ஜீயர். (திருமஞ்சனத்தின் நடுவில் உலர்ந்த வஸ்த்ரத்தை சாத்தி, பின் உள்ளிருந்து ஈர வஸ்த்ரத்தை வாங்கும்படி (களையும்படி) நியமித்துள்ளது, நம்பெருமாள் தம் இடுப்பில் யசோதை கட்டியதாலுண்டான தழும்பு தென்படும் என்று லஜ்ஜித்திறே என்றபடி.)

கட்டுண்ணப் பண்ணிய – ஒரு சுற்றுக்குப் போராத தாம்பு இரண்டு சுற்றுக்குப் போரும்படி திருமேனியில் இடம் கொடுத்தபடி. ஆஶ்ரிதர்கையில் கட்டுண்ணாவிடில் சீலத்துக்குப் போராது. அநாஶ்ரிதரைக் கட்டாவிடில் ப்ரபாவத்துக்குப் போராது. ராஜாவானவன் எதிரிகளைக் கட்டி வைக்கையும் பும்ஸ்த்வம், தன் மஹிஷியின் கையில் பூமாலையாலே கட்டுண்டு கிடக்கையும் பும்ஸ்த்வம்.

பெருமாயன் – ஆஶ்சர்ய சேஷ்டிதங்களையுடையவன். அழுகையும், அஞ்சிநோக்கு மந்நோக்கும் தொழுகையுமான சேஷ்டிதங்கள். இவனுடைய மேன்மை எல்லை காணலாம்; நீர்மை தரை காணவொண்ணாதிறே! அவாப்த ஸமஸ்தகாமனுக்கு ஒரு குறையுண்டாய், அது தன்னை எளியாரைப் போலே வழியல்லா வழியே களவிலே ஒருப்பட்டு, அது தன்னையும் ஸர்வ ஶக்தியான தான் தலைக்கட்டமாட்டாதே வாயது கையதாக அகப்பட்டுக் கட்டுண்டு அடியுண்டு அதுக்கொரு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதே 'பையவே நிலையும்' என்று உடம்பு வெளுத்து பேகணித்து நின்ற நிலை அத்யாஶ்சர்யமிறே!

அழுகையும் அஞ்சி நோக்கு மந்நோக்கும் – உரலோடே கட்டிவைத்தவாறே அழ, அவள் 'வாய் வாய்' என்றவாறே அஞ்சி பேதைத்தனம் தோற்ற அவளைப் பார்க்கும். "தா₃ம்நாசைவ உத₃ரே ப₃த்₃வா ப்ரத்ய ப₃த்₄நாத்₃ உலூக₂லே । க்ருஷ்ணம் அக்லிஷ்ட கர்மாணம் ஆஹச இ₃தம் அமர்ஷிதா ॥ யதி₃ ஶக்நோஷி க₃ச்ச₂ த்வம் அதிசஞ்சல சேஷ்டித । இதி உக்த்வா அத₂ நிஜம் கர்ம ஸா சகார குடும்பி₃நீ ॥ (வி.பு.) (யசோதையானவள், தான் தாயான பரிவு தோற்ற இவனைக் களவிலே கண்டுபிடித்து, தாம்பாலே ஒரு உரலோடே சேர்த்துக்கட்டி 'துரு துருக்கையான நீ வல்லையாகில் போய்க் காணாய்' என்று மிரட்ட, போகமாட்டாதேயிருந்தான்) என்கிறபடி யசோதையானவள் இவனைத் தாம்பாலே ஒரு உரலோடே சேர்த்துக்கட்டி, 'துருதுருக்கையான நீ வல்லையாகில் போய்க் காணாய்' என்று மிரட்டிச் செல்ல, தாய் கட்டின கட்டையவிழ்க்க ஶக்தனல்லேன் என்றிருந்தானிறே. ஸம்ஸார பந்த ஸ்திதி மோக்ஷ ஹேது: என்று எல்லோரையும் கட்டுகைக்கும் விடுகைக்கும் ஹேதுவானவன்கிடீர் இப்போது ஓர் அபலை கட்டின கட்டையவிழ்த்துக் கொள்ள ஶக்தனன்றிக்கேயிருக்கிறான். கட்டிவைத்து கோல்கொண்டு அடிக்கப்புக்கவாறே 'தொழுகையும்' என்கிறபடி அஞ்ஜலி பண்ணும். எல்லாரையும் தொழுவித்துக் கொள்ளுமவனிறே தொழுகிறான். 'அஞ்ஜலி பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ' என்றறிந்து தொழும். இவை கண்ட யசோதை தொல்லையின்பத்திறுதி கண்டாள். நித்யமுக்தர் ஜ்ஞான ஶக்த்யாதிகளைக் கண்டு அநுபவித்தவர்கள். இவள் ஸௌஶீல்யாதிகளைக் கண்டநுபவித்தவள். ஏவம்விதமான ஸௌஶீல்யாதி குணசேஷ்டிதங்கள்.

என்னப்பனில் நண்ணி – பகவத் விஷயத்தில் நின்றும் ஆழ்வார் பக்கலிலே நெஞ்சை வைத்து. ஶப்தாதி விஷயங்களை விடலாம் அவற்றின் தோஷதர்ஶனத்தாலே. அங்ஙனொரு

தோஷம் காண விரகில்லையாகையாலே ப்ரதமாவதியைவிட்டு சரமாவதி வருகை அரிதிறே! பகவத்விஷய போக்யதையிலே நின்றும் மீட்டுத் தன் பக்கலிலேயாக்கிக் கொண்டது ஆழ்வார் வைலக்ஷண்யம் என்கிறார். பகவத் விஷயத்தில் அடியற வார்த்தை சொன்னாராகில், ஆழ்வாரோட்டை ஸம்பந்தத்தையறுத்துக் கொண்டவராவாரிறே.

தென்குருகூர் நம்பியென்றக்கால் அண்ணிக்கும் - அவனுக்கு குணபூர்த்தி ஜ்ஞான ஶக்த்யாதிகளாலே. இவருக்கு பூர்த்தி ஜ்ஞான பக்த்யாதிகளாலே. ஜகத்தை தனக்காக்கும்படியான குணங்கள் அவனது. அவன்தன்னைத் தனக்காக்கும்படியான குணங்கள் இவரது.

குருகூர்நம்பி என்றக்கால் – ஆழ்வார் திருநாமத்தைச் சொன்னால். பகவத் விஷயத்தில் மநோவாக்காயங்கள் மூன்றாலும் அந்வயிக்க வேணும். இங்கு உக்தி மாத்ரம் அமையும். *அண்ணிக்கும் அமுதூறும் என் நாவுக்கே – நினைத்த நெஞ்சம் தித்தித்து, சொன்ன நாக்கும் தித்தித்து வாராநின்றது.

என்றக்கால் அமுதூறும் – உச்சாரணம் ஸக்ருத் ஆனாலும், ஸாரஸ்யம் ஸதாகால வர்த்தியாகாநின்றது. இனி பகவத் விஷயத்தை நினைக்கைக்கு நெஞ்சுமில்லை; சொல்லுகைக்கு நாக்குமில்லை. இந்த ஸாரஸ்யம் எங்களுக்கு பிறக்கவில்லையே யென்ன – (என் நாவுக்கே) உங்களைப்போலே பகவத் விஷயமும் ரஸித்து ஆழ்வாரும் ரஸிக்கும் நாவன்றே என்னது.

2. நாவினால் நவிற்றின்ப மெய்தினேன்
மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே
தேவு மற்றறியேன் குருகூர்நம்பி
பாவினின்னிசை பாடித் திரிவனே.

நாவினால் நவிற்று – கண்ணனது துருதுருக்கைத்தனத்தை பொறுக்கவொண்ணாது அவனை உரலிலே கட்டிய இடைச்சி, பெரிய திருநாளிலும் ஸந்த்யாவந்தனம் முட்டாமல் நடத்துவாரைப் போலே, கறப்பது, கடைவது முதலான தன் கார்யத்திலே ஒருப்பட்டாள். ஓரபலை கட்டின கட்டை அவிழ்க்க மாட்டாதிருந்தான் அவன். கட்டினவர்களே இரங்கி அவிழ்க்க வேணும் என்றிறே அவன் நினைவு. இந்த ஸௌஶீல்ய குணத்திலே ஆழங்காற்பட்ட ஆழ்வார் 'எத்திறம்' என்று மோஹித்துக் கிடந்தார். ஆழ்வார் ஈடுபட்ட சரித்ரத்தை அநுஸந்தித்திருக்கச்செய்தே, அதில் கால்தாழாதே ஆழ்வாருடைய போக்யதையிலே நின்றார் ஸ்ரீமதுரகவிகள். அவருக்கு இஹலோக ஸுகஜநகரும் ஆழ்வாரே. பரலோக ஸுகஸாதனமும் ஆழ்வாரே. ஸ்வாமியும் ஆழ்வாரே. காலக்ஷேப விஷயமும் ஆழ்வாரே.

---

* *தித்திக்கும்*

நாவினால் நவிற்று – ப்ரத்யக்ஷே கு ரவஸ் ஸ்துத்யா: என்கிறபடி ஆசார்யனை ஸ்துதிக்கவிறே நாக்கு கண்டது! நவிற்று என்றபோதே நாவினால் சொன்னது ஸித்தமாயிருக்க, நாவினால் என்று விசேஷிக்கிறது, மநஸ் ஸஹகாரம் இன்றியே வாங்மாத்ர உச்சாரணத்தாலே ஆனந்தம் ஸித்தித்தது என்கைக்காக.

நாவினால் நவிற்று இன்பமெய்தினேன் – பகவத் விஷயத்தில் புறம்புள்ள இந்திரியங்களை மனஸ்ஸிலேயடக்கி, மனஸ்ஸை *ஶு*பாஶ்ரயத்திலே வைத்து, பின்பு அநவரத பாவனையுண்டாய், அதுவும் ஸமாதி பர்யந்தமானாலிறே ஆனந்தம் ஸித்திப்பது. பகவத் விஷயத்தைப் பற்றினார்க்கு ஆனந்தம் காலாந்தரபாவி. இங்கு அப்படியன்றிக்கே ரஸத்தின் எல்லையை எய்தினேன்.

அப்படியே ஆகட்டும். *ஶ*ரீர வியோக ஸமநந்தரம் பிறக்கும் ஆனந்த ஸித்திக்கு ஒரு ஸாதனத்தைப் பற்ற வேணுமே; லோக விக்ராந்த சரணங்களை ஆ*ஶ்*ரயிக்க வேணுமேயென்ன – (மேவினேன் அவன் பொன்னடி) அதுக்கும் ஆழ்வார் திருவடிகளையே உபாயமாகப் பற்றினேன். அவன் பொன்னடி உலகமளந்த பொன்னடியாய் ஊர்ப்பொதுவாய் எல்லார் தலையிலும் இருக்கும். இத்திருவடிகள் த்ரைவித்ய *வ்ருத்த ஜந மூர்த்த விபூஷணமாயிருப்பதிறே. (மேவினேன்) இனி வேறொரு கால் (ஈ*ஶ்*வரன் திருவடிகள்) இருக்கைக்கு இடமில்லாதபடி பொருந்தினேன். இது எத்தனை குளிக்கு நிற்கும் என்ன (மெய்ம்மையே) இது ஸத்யம். இவரை உபகார கோடியிலாக்கி, உத்தே*ஶ்*யம் கிட்டினவாறே, அதிலே தோள்மாறும்படியன்றிக்கே, ஆழ்வார் திருவடிகளே உத்தே*ஶ்*யமாகப் பொருந்தினேன். (மெய்ம்மையே) ஶ்ரீசடகோபனைத் தலையிலே கொண்டிருந்தும் பொய் சொல்வாருண்டோ?

*ஶ*ரணாகதி 'ஸா தேவேஸ்மிந் ப்ரயுஜ்யதாம்' என்றபடி ஈ*ஶ்*வர விஷயத்திலே ப்ரயோகிக்கவேணுமேயென்ன (தேவு மற்றறியேன்) ஆழ்வாரையொழிய வேறு தேவு அறியேன். மெய்ம்மையே என்றவிடம் அந்வயத்தாலே சொன்னபடி. தேவுமற்றறியேன் என்கிறவிடம் வ்யதிரேகத்தாலே சொல்கிறபடி. 'ஆசார்ய தேவோ பவ' என்று *ஶ*ாஸ்த்ரம் காட்டித்தந்த தெய்வமிறே. நான் தேவதையாக வ்யுத்பத்தி பண்ணிற்று ஆழ்வாருக்கு மேற்பட இல்லை. ஆனால் 'என்னப்பன்' என்று கீழே பகவத் விஷயத்தை ஸ்வாமியாக அநுஸந்தித்தீரேயென்ன, அது ஆழ்வார் ஆதரித்த விஷயம் என்று ஆதரித்தேனித்தனை போக்கி தேவதா ப்ரதிபத்தி பூர்வகமாக சொன்னேனன்று.†

---

* வ்ருத்த ஜநங்களாகிறார் உத்தரபாக நிஷ்டர்

† எம்பெருமானின் விபவே பரத்வத்தை ஸ்தாபிக்கும் பதிகம் 'திண்ணன் வீடு' (திருவாய் 2.2). அதில் மூன்றாம் பாட்டின் ஈற்றடி 'மாறனின் மிக்குமோர் தேவுமுளதே'. 'மால்தனில் மிக்குமோர் தேவுமுளதே' என்றபடி. 'மால்தனில்' என்பது இலக்கண விதிப்படி மாறனில் என்றாகும். இங்கு *ஶ*ப்த ஸ்வாரஸ்யம் – மாறன் எனப்படும் ஆழ்வாரை மிக்கும் தேவும் உளதோ? என்று மதுரகவிகளின் ஹ்ருதயத்தை ஆழ்வார் வெளியிட்டது பகவத் ஸங்கல்பமே.

ஆனாலும் காலக்ஷேபத்துக்கு பகவத் விஷயத்தைப் பற்றிக் காலம் போக்க வேணுங்காணுமென்ன (குருகூர்நம்பி பாவின் இன்னிசை பாடித்திரிவனே) எனக்கு காலக்ஷேப விஷயம் உங்களைப்போலே *ஒன்றிரண்டாயிருந்ததோ? ஆயிரம் ப்ரகாரமில்லையோ?

குருகூர்நம்பி - கவிபாடுகைக் கீடாம்படி 'வால்மீகிர் பகவாந் ருஷி:' என்கிறபடியே ஜ்ஞாநாதி குணபூர்த்தியுடைய ஆழ்வார். 'ஏற்கும் பெரும்புகழ் வானவர்சன் கண்ணன் தனக்கு, ஏற்கும் பெரும்புகழ் வண்குருகூர்ச் சடகோபன்' இறே.

இன்னிசை பாடித்திரிவனே - திருவாய்மொழி பாசுரங்களே எனக்கு கால யாத்ரை. இதுவே தாரகமாகக் கொண்டு ஸஞ்சரிப்பன். பகவத் ப்ரதிபாதகம் என்றன்று இவர் திருவாய்மொழியைப் பாடுவது; ஆழ்வார் அருளிச்செய்தது என்றாயிற்று. திருவாய்மொழியில் 'குருகூர்ச் சடகோபன்' என்று வருமே; அதற்காக வாய்த்து திருவாய்மொழி தன்னையும் இவர் ஆதரிப்பது.

3. திரிதந்தாகிலும் தேவபிரானுடைக்
கரிய கோலத் திருவுருக்காண்பன் நான்
பெரிய வண் குருகூர் நகர் நம்பிக்கா
ளுரியனாயடியேன் பெற்ற நன்மையே.

ஒருவனை ஒருவன் உகந்தானாவது, அவன் உகந்தாரை உகக்கையாய்த்து. பகவானுக்கு ப்ரியம் என்று ஆசார்ய விஷயத்திலே ப்ரவணனாகக்கடவன். ஆசார்யனுக்கு ப்ரியம் என்று பகவத் விஷயத்திலே ப்ரவணனாகக்கடவன்.

இவர் 'தேவு மற்றறியேன்' என்று நம்மையும் மறந்து ஆழ்வார் பக்கலிலே ப்ரவணரானாரே. நம்மை அறிவித்தவர் என்றிறே இவர்க்கு ஆழ்வார் பக்கல் இவ்வளவு ஆதரம். இப்படி நம்மையுகந்தாருக்கு இவர் ப்ரீதராமிடத்தில், நாம் இவர்க்கு கொடுக்கும் பரிசில் ஏதென்று பார்த்து, இவர் திருவுள்ளத்திலே தன்னுடைய வடிவை ப்ரகாசிப்பித்தான். ஆசார்ய விஷயத்தை பற்றியிருப்பானொருவனை பகவத்விஷயம் தானே மேல் விழுமிறே.

(திரிதந்தாகிலும்) 'தேவுமற்றறியேன்' என்று பகவத் விஷயத்தோடு ஒட்டற்று திரியா நிற்கச் செய்தேயும், தேவபிரானுடைக் கரிய கோலத் திருவுருக் காண்பன் நான் - நித்ய ஸூரிகளுக்கு படிவிடும் வடிவு காளமேக நிபச்யாமமாய், அழகுதான் ஒரு வடிவு கொண்டாப்போலேயிறே யிருப்பது. (கோலம்) ஆனைக்கு உதவியபோது அரைகுலைய தலைகுலைய வந்து விழுந்தாப்போலேயன்று; சாத்தின திருவாபரணமும் தானுமாய் அநுபாவ்யனாய் வந்து நின்றான். அபிமத விஷயத்தைப் பார்க்கப் போம்போது அலங்கரித்துக் கொண்டிறே போவது.

---

* திருமந்த்ரமும் த்வயமும்

திருவுரு - கழற்றவொண்ணாத திருவாபரணத்தையும் கொண்டு வந்தார். இருண்ட வடிவுக்கு மின்போலே ப்ரகாஶிப்பவளிறே.

காண்பன் - இவ்வடிவை ஶ்ரவண மாத்ரம், மநநமாத்ரம் அன்றிக்கே ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாம்படி அநுபவிக்கப் பெற்றேன். அவனே ஆதரித்து மேல்விழுகையாலே, கண்ணாலே காணுமாப் போலேயாய்த்து.

(காண்பன் நான்) 'தேவு மற்றறியேன்' என்று பகவத் விஷயத்தை ஸந்யஸித்த நான் பார்த்தேன். நவநீத சௌர்யத்திலுட்பட நாக்கு நீட்டாதவர் பரதஶையைக் காணவே, ஸாமாந்யமாகப் பார்த்து விட்டபடி. வகுளகந்தியாயிராதே துளஸீகந்தியாயிருக்கையாலே 'அந்ய விஷயம்' என்றஞ்சி கடக்க நின்று கண்டபடி. ஆழ்வார் உகந்ததை உகவாதொழிய வொண்ணுமோ! ஆசார்யருசி பரிக்ருஹீதமாய் வருமது ஆதரணீயமிறே!

(பெரிய வண்குருகூர் நம்பிக்கு ஆளுரியனாய்) ஆழ்வாருக்கு அநந்யார்ஹ ஶேஷபூதனாய்.

(நம்பிக்கு) வேறு பகவத்விஷயம் தேடிப்போக வேண்டும்படியோ ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது! ஆழ்வாரை யநுபவிக்கும் அநுபவத்திலே பகவத் விஷயமும் அந்தர்பூதமிறே! 'நான் ஒன்றைப் பற்றினேன், ஒன்றை விட்டேன்' என்று சொல்லலாம்படியோ ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது! குருகூர்நம்பி – இப்பூர்த்திக்கு ஊற்றுவாய் இத்தேஶவாஸமிறே!

பெரிய வண்குருகூர் - விபூதிமானை தமக்குள்ளே அடக்கியிருக்கிற ஆழ்வாரை தனக்குள்ளேயடக்கும்படியான பெரிய தேஶம். பெரியவண்குருகூர் நகர் - தேவகீ புத்ர ரத்னமும் *விற்பிடிமாணிக்கமும் விலை செல்லும் தேஶம்.

அடியேன் பெற்ற நன்மையே - ஆழ்வாருக்கு அடியனாய் இருந்து நான் பெற்ற பகவல்லாபம். ஆழ்வார் அவனுக்கு ஶேஷபூதராயிருந்து வைத்து 'அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ' என்று இன்னும் பெறவேண்டும் நன்மைக்கு அலமாராநிற்க, ஆழ்வாருக்கு ஶேஷபூதனான நான் இனிப்பெறவேண்டும் நன்மையொன்றுமில்லை என்றபடியாய்த்து. வைஷ்ணவ ஸம்ஶ்ரயமானால் 'ப்ரயாஸ்யந்தி' என்று போய்ப் பெறவேண்டாதே இருந்தவிடத்திலே பாக்யம் ஸித்திப்பதே! 'ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சார்த்தியிருப்பார் தவம்' என்ற வார்த்தை என்னளவில் பலித்தது என்று ஸந்துஷ்டராகிறார்.

---

* சக்ரவர்த்தி திருமகன்

4. நன்மையால்மிக்க நான்மறையாளர்கள்
புன்மையாகக் கருதுவராதலில்
அன்னையாயத்தனா யென்னையாண்டிடும்
தன்மையான் சடகோப னென்னம்பியே.

நன்மையால் மிக்க – 'தேவுமற்றறியேன்' என்று இவர் சொல்லக் கேட்டோர், அதென்? 'ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதாச மாதவ:', 'உலகுக்கோர் முந்தை தாய்தந்தை' என்கிறபடியே ரிஷிகளும் ஆழ்வார்களும் ஏககண்டமாக ஈஶ்வரனையே சொல்லாநிற்க, நீர் ஆழ்வாரையே ஆஶ்ரயிக்கைக்கு அவர் உமக்குச் செய்த உபகாரமென் என்ன, ஸத்துக்களாலும் கர்ஹிதனான தோஷபூயிஷ்டனான என்னை அங்கீகரிக்கையாலே ஆழ்வார் குணபூர்ணர் என்று உபபாதிக்கிறார்.

நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் – நன்மையால் அதிஶயித்தவர்கள்; நன்மையிலே நிலைநின்றவர்கள். ஒருவனுக்கு பொல்லாங்காவது 'சினத்தினால் செற்றம் நோக்கி தீவிளி விளிவன் வாளா' என்கிறபடி நிர்நிபந்தனமாக (காரணமின்றி) பகவத் விபூதி பூதரோடே சீறுபாறு என்று போருகை. நன்மையாவது – அவர்கள் பக்கல் அபகாரம் செய்யாது, அவர்களை உபேக்ஷித்திருக்கை. நன்மையால் மிகுகையாவது – அவ்வபகாரர் அளவிலும் உபகாரகனாய் இருக்கை. அதாவது அவர்கள் குறைகாணாதொழிகை. இப்படி இருப்பவர்கள் பிராட்டி, கூரத்தாழ்வான் போல்வாரிறே! ராக்ஷஸி வர்க்கம் நலியாநிற்க 'கார்யம் கருண மார்யேண' என்று திருவடியினிடம் மன்றாடி ராக்ஷஸிகளை ரக்ஷிப்பித்தாளிறே! ஆகையிறே இவள் கோ₃ஷ்டியைப் பற்ற ராமகோ₃ஷ்டி *லகு₄தரையாயிற்று! அவயவங்களில் ஹாநி பிறக்கும்படி அபகாரம் பண்ணின 'நாலூரானும் நான்புக்க லோகம் புகவேணும்' என்றிறே ஆழ்வான் அபேக்ஷித்தது! ப்ரஹ்லாதன் ஸர்வேஶ்வரனை அபேக்ஷித்து தன்னை நலிந்த புரோஹித வர்க்கத்தையும் ஹிரண்யாபராதத்தையும் க்ஷமிப்பித்தானிறே. இப்படி அபகாரிகள் பக்கல் உபகாரராய் போந்தார்கள்.

நான்மறையாளர்கள் – இத்தகைய ஆத்மகுணம் உண்டாகைக்கு ஊற்றுவாயான நாலுவகைப்பட்ட வேதத்துக்கு †வ்யாஸபதம் செலுத்தவல்லவர்கள். 'மாதா பித்ரு ஸஹஸ்ரேப்யோ வத்ஸலதரம் ஹி ஶாஸ்த்ரம்' என்றபடி ஆயிரம் தாய்தந்தையரைக்காட்டிலும் வாத்ஸல்யம் மிகுந்ததிறே சாஸ்த்ரம். இது கற்றவர்களுக்கு ப₂லம் அபகாரிகள் பக்கல் உபகாரம் பண்ணுகை. இது கல்லாதவர்களுக்கு பலம் உபகாரிகள் பக்கலிலே அபகாரம் பண்ணுகை. நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் – ப்ரமாணாந்தரங்களிற் காட்டில் ப்ராமாண்யஶ்ரீயால் அதிஶயிதமான வேதாந்த ஜ்ஞானமுடைய மஹாத்மாக்கள்.

---

* தாழ்ந்ததாயிற்று.

† வ்யாஸ பதமாவது – அகண்டமான வேதத்தை அர்த்தத்தின்படியே சாகைகளாகவும், காண்டங்களாகவும் பிரிக்கிற வ்யாஸருடைய அதிகாரம்.

(புன்மையாகக் கருதுவர்) அப்படி பிறர் குறை காணமாட்டாதவர் உட்பட, என்னுடைய தோஷாதிஶயத்தாலே, என்னை அநாதரிக்கும்படியாயிற்று. கருதுவர் – அவர்களுடைய அநாதரம்காணும் இவரை வருத்துகிறது. 'மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய' என்கிறபடி மஹான்களுடைய அங்கீகாரம் புருஷார்த்தம்; அவர்கள் அநாதரம் து:க்க ஹேதுவிறே. 'ஹதோऽஸ்மி யதி$_3$ மாமேவம் ப$_4$கவாநபி மந்யதே' (பரத்வாஜரே! தேவரீரும் என்னை இப்படி நினைத்தீரானால் நான் கொல்லப்பட்டவனே யாவேன்) என்றானிறே ஸ்ரீபரதாழ்வான். 'திக$_3$ஸ்து தஜ் ஜந்ம யத் ஸாது$_4$ பஹிஷ்க்ருதம் ஸ்யாத்' (கம்ஸ ஸம்பந்தத்தால் தோஷமுடையவென்னை கண்ணன் அங்கீகரிப்பனோ. நல்லோர் அநாதரிக்கும் இஜ்ஜந்மத்தை சுடவேணும்) என்றானிறே அக்ரூரன். (ஆதலில் அன்னையாய் அத்தனாய்) இப்படி ஸாத்விக வர்க்கம் கைவிட்டதே ஹேதுவாக, 'இவனை நம்மையொழிய கைக்கொள்வாரில்லை' என்று என் பக்கலிலே வத்ஸலரானார். அசரண்யருக்கும் சரண்யரிறே! (புகலற்றவர்க்கு புகலானவர்). *த்ரை வித்$_3$ய வ்ருத்$_3$த$_4$ ஜந மூர்த்த$_4$ விபூ$_4$ஷணம், யத் ஸம்பச்ச ஸாத்விக ஜநஸ்ய யதே$_3$வ நித்யம் । யத்$_3$வா ஶரண்யம் அஶரண்ய ஜநஸ்ய புண்யம், தத் ஸம்ஶ்ரயேம வகுளாப$_4$ரணாங்க்$_4$ரி யுக்$_3$மம் ॥

(அன்னையாய் அத்தனாய்) 'மாதாபிதா' என்கிறபடி ஆழ்வார் முதலில் ப்ரியபரராய், பின்பு ஹிதபரரானார். 'உம்முயிர் வீடுடையான்' 'பத்துடையடியவர்க்கெளியவன்' 'பரிவதில் ஈசனைப்பாடி விரிவது மேவலுறுவீர் ........ நன்னீர் தூய்ப்புரிவதுவும் புகை பூவே' என்று ப்ரியமான பகவத் ப்ரபாவத்தை உபதேஶித்திறே, 'கழிமின் தொண்டீர்கள் கழித்துத் தொழுமின்' என்று ஹிதத்தை உபதேஶித்தது.

(என்னையாண்டிடும் தன்மையான்) – ப்ரியத்துக்குக் கடவ மாதாவும், ஹிதத்துக்குகடவ பிதாவும், ஹிதைஷியான ஆசார்யனுமாகையை ஸ்வபாவமாக உடையவர்.

(என்னையாண்டிடும் தன்மையான்) – தாம் திருவாய்மொழியருளிச் செய்கிறபோது என்னைப் பட்டோலை கொள்ளும்படி, உசிதமான கைங்கர்யத்தைக் கொண்டவர். (என்னையாண்டிடும்) – பொலிந்துநின்றபிரான் பக்கலிலும் ஒருகால் போய் வாரீர் என்று நியமித்தார். 'நீள்குடக் கூத்தனுக்கு ஆட்செய்வதே உறுவது' என்று பொலிந்துநின்ற பிரானுக்கும் ஓரஞ்ஜலி நேரும்படி பண்ணினார்.

(சடகோபன்) – என்னுடைய †ஶாட்யத்தைப் போக்கி என்னை ரக்ஷித்தவர். கீழ் மூன்று பாட்டுக்களிலும் 'தென்குருகூர் நம்பி' என்று சொன்னவர், இப்பாட்டில் 'சடகோபன்' என்கிறார் ஸ்வதோஷத்தைப் போக்கினபடியாலே.

---

* எது வைதிகப் பெரியோர்களின் தலையலங்காரமாயிருக்கிறதோ, ஸாத்விக ஜனங்களுக்கு எது தினந்தோறும் செல்வமாயுள்ளதோ, புகலற்ற மனிதர்களுக்கு எது புகலாயிருக்கிறதோ, புண்ணியமானதான அந்த வகுளாபரணாின் திருவடியிணையை ஆஶ்ரயிக்கக்கடவோம். (ஸ்ரீவை.ஸ்.2)

† அறிவின்மையை

(என் நம்பியே) தாய் செய்வது தமப்பன் செய்யமாட்டான். தமப்பன் செய்வது தாய் செய்யமாட்டாள். ஆசார்யன் செய்வது இருவரும் செய்ய மாட்டார்கள். பேஷி செய்வது பேஷூதன் செய்யமாட்டான். எல்லாம் செய்யவல்ல பூர்த்தியை யுடையவர் ஆழ்வாரே. ஸத்வ நிஷ்டர்க்கு பஹிஷ்டனான வென்னை தாம் அங்கீகரித்தும், அஹிதங்களில் கைவளர்ந்து போந்தவென்னை ஹிதங்களில் மூட்டியும், அநுபகாரனான என்னைக் கைங்கர்யம் கொண்டும் போந்த பூர்த்தியுடையவர். பல சொல்லியென்? என்னுடைய தண்மையாகிற பெருங்குழி நிரம்பும்படி பூர்த்தியையுடையவர் ஆழ்வார் என்று ஸ்வஸித்தாந்தத்தை த்ருடீகரிக்கிறார்.

5. நம்பினேன் பிறர் நன்பொருள் தன்னையும்
நம்பினேன் மடவாரையும் முன்னெலாம்
செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பிக்
கன்பனா யடியேன் சதிர்த்தேனின்றே.

நம்பினேன் பிறர் நன்பொருள் தன்னையும். நன்பொருள் – விலக்ஷண த்ரவ்யம். அதாவது அஹமர்த்தமாய், நித்யமாய், நிர்விகாரமாய், ஸ்வயம் ப்ரகாஶமாய், ஸுகமாய், ஸ்வபாவதோ போக்யமாயிருக்கும் ஆத்மவஸ்து. த்ரவ்யங்களில் ப்ரதாநமாக ஆத்மவஸ்துவை நிச்சயித்தார்களிறே. ஈஶ்வரனுக்கு ஸ்ரீகௌஸ்துப ஸ்தாநீயமாயுள்ள இவ்வஸ்துவைக்கிஷ் நான் ஆசைப்பட்டது. நம்புதல் – ஆசைப்படுதல்.

பிறர் நன்பொருள் – இங்கு பிறர் என்கிறது ஈஶ்வரனை. சேதநா சேதந விஸஜாதீயனான ஸர்வேஶ்வரனை அந்யன் என்றபடி. அவனுடைய ஸ்வமான இவ்வாத்ம வஸ்துவை ஸ்வதந்த்ரமாக நினைத்தேன்.

பிறர் நன்பொருள் – ரத்நாபஹாரம் பண்ண அஞ்சாதவன், விறகும் வைக்கோலும் களவுகாண அஞ்சுவனோ? பகவத் அதீனமான ஆத்மவஸ்துவை அபஹரித்த நான், பிறர் பொருள்களையும் ஆசைப்பட்டேன். அநாத்மாவான தேஹத்திலே ஆத்மபுத்தி பண்ணி தேஹாத்மாபிமானியாய், தேஹ ரக்ஷணத்திற்காக லௌகிகரது ஸ்வர்ணாதிகளையும் ஆசைப்பட்டுப் போந்தேன். அவர்கள் நினைவாலே அத்த்ரவ்யங்கள் 'நன்பொருள்' இறே!

நம்பினேன் மடவாரையும் – ஆத்ம ஜ்ஞானம் பிறந்தாலன்றோ 'பரமாத்மா புருஷார்த்தம்' என்பது. தேஹமே ஆத்மா வென்றிருந்ததால், உடம்புக்கு உடம்பே போக்யமாகையாலே, பரஸ்த்ரீ ஶரீரங்களே போக்யங்கள் என்றிருந்தேன். அபுருஷார்த்தங்களான அர்த்தகாமங்களில் புருஷார்த்த புத்தி பண்ணினேன். ஒன்றில் பர்யாப்தமாகாமையாலே மடவார் என்று பஹுவசனம்.

முன்னெலாம் – காலமோ அநாதி; சேதநன் நித்யன். கரண களேபரங்களும் ப்ரவாஹதயா நித்யம். அவித்யா கர்ம வாஸனைகள் வந்தேறின நாளறியேன். ஆகையால் இவ்வநர்த்த வநுஷ்டானமே முன்புள்ள காலமெல்லாம் யாத்ரையாய்ப் போந்தேன்.

செம்பொன் மாடத்திருக்குருகூர் நம்பிக் கன்பனாய் – அஹங்காரார்த்த காமபரவ*ஶ*னாய் தே*ஶ*ாந்தரங்களில் திரியா நிற்க, தெற்கு திக்கில் திருநகரியின் மாடங்கள் மின்னித் தோற்றவே, இதொரு தே*ஶ* விசேஷமிருந்தபடியென்? விலக்ஷண விஷயங்களுண்டாகில் அநுபவிப்போம் என்று ஊரிலே புக்கேன். ஒரு வைஷ்ணவ ஸகா*ஶ*த்தில் க்ஷத்ரபந்துவுக்கு பிறந்த அவஸ்தை போல், எனக்கும் என் பூர்வ வ்ருத்தத்தை ஆராயாத குணபூர்த்தியுள்ள ஆழ்வார் ஸகா*ஶ*த்திலே அபஹாரபுத்தி போய், ஆழ்வார் திருவடிகளிலே ஆதரம் பிறந்து அவர்க்கே அன்பனாய் விட்டேன்.

சென்பொன் மாடத்திருக்குருகூர் – ஆழ்வார் திருவடிகளோபாதி திருநகரியும் இவர்க்கு ஸ்ப்ருஹணீயமாயிருக்கையாலே திருநகரியை கவிபாடுகிறார். அர்த்த காம ப்ரவணரையும் ஆளாக்கும் தே*ஶ*ம்.

திருக்குருகூர் நம்பிக் கன்பனாய் அடியேன் சதிர்த்தேன் இன்றே – அன்று ஸ்வதந்த்ரனாய்ப் போந்த நான் இன்று ஆழ்வாருக்கு *ஶே*ஷமானேன். தேஹாத்மாபிமானியாய் இருந்தபோதிறே நான் என்பது. ஸ்வரூப ஜ்ஞானம் பிறந்தால் அடியேன் என்றிறே அஹமர்த்த ப்ரதிபத்தியிருப்பது.

சதிர்த்தேன் – அன்று சதிரிள மடவாரிடம் இளிம்புபட்ட நான், இன்று ஆழ்வாரை அண்டை கொண்டு சதிரனானேன். சதிர்த்தேன் – விஷயங்களைவிட்டு, பகவத் விஷயத்தளவிலே நில்லாதே, ஆழ்வார் அளவும் வரும்படியான சதிரையுடையனானேன். 'மோக்ஷயிஷ்யாமி' என்றவன் முழங்கைத் தண்ணீர் பார்த்திராதே, ஆழ்வார் ப்ரபாவத்தாலே விஷயாதிகளை வென்றேன்.

இன்றே – அன்று அப்படியிருந்தேன். இன்று இப்படியானேன். நடுவில் இதுக்கு கிடப்பதொரு ஹேது கண்டிலேன் என்கை. அன்று ஈ*ஶ்*வரனும் கூட நிற்கச் செய்தே ஸம்ஸரித்துப் போந்தேன். இன்று ஆழ்வார் ஸந்நிதி மஹாத்ம்யத்தாலே வாழ்வு இனிதாயிற்று என்று ப்ரீதராகிறார்.

ஆசார்யர்களை 'நம்பீ' என்கைக்கும், அவர்கள் அழைத்தால் 'அடியேன்' என்கைக்கும் ஹேது ஸ்ரீமதுரகவிகள் வாஸநையாய்த்து.

6. இன்றுதொட்டு மெழுமையும் எம்பிரான்
நின்றுதன் புகழ் ஏத்தவருளினான்
குன்றமாடத் திருக்குருகூர்நம்பி
என்றுமென்னை யிகழ்விலன் காண்மினே.

இன்று தொட்டும் – என் தோஷமே *பச்சையாகக் கைக்கொண்டவின்று தொடங்கி. பகவத் விஷயத்திற்காட்டில் தத் ஸம்பந்தியான ஆழ்வார் உத்தே*ஶ்*யர் என்று ருசி பிறந்த இன்று முதலாக.

---

* உபஹாரம் (காணிக்கை)

எழுமையும் - ஏழு ஜந்மம் என்கிறது உபலக்ஷணம். மேலுள்ள காலமெல்லாம் என்றபடி. ஒரு தேஶ விஶேஷத்திலே போனாலும் ஆழ்வார் கீழே ஒதுங்குவராய்த்து இவர். மாதுல குலத்துக்குப்போன ஸ்ரீபரதாழ்வானைப் பின்சென்ற ஸ்ரீஶத்ருக்நாழ்வானைப் போலே இவரும் திருக்குருகூர்நம்பிக் கன்பனாகையாலே ப்ரீதிபுரஸ்க்ருதத்வம் உண்டாய்த்து.

எம்பிரான் – எனக்கு ஸ்வாமியானவர். ஸ்வாமியானவன் ஸ்வத்தைக் குற்றம் கண்டு இகழுமோ? என் குற்றங்களையும் குணமாகக் கொண்டு, நான் அத:பதியாமல் நோக்கினவர். என்னுடைய அஹங்கார அர்த்தகாமங்களில் நசையறுத்து பகவத் விஷயத்திலே காட்டிக் கொடாதே தாமே கைக்கொண்ட மஹோபகாரகர்.

நின்று தன்புகழ் ஏத்தவருளினான் – பகவல்லாபத்தளவும் ஆழ்வாரை பற்றி நின்று, அது கிட்டினவாறே அதில் தோள்மாறும்படியன்றிக்கே, யாவதாத்மபாவி ஆழ்வாருடைய குணஸ்துதியே புருஷார்த்தம் என்று அத்யவஸித்து ஏத்த அருளினார். இவ்வாசிக கைங்கர்யம் ஸித்திப்பதும் அவர் அருளாலே. அவருடைய குணாநுஸந்தானத்தாலே மனஸ் ஶைதில்யமடையாமல் தெளிந்து நின்று ஏத்த க்ருபை பண்ணினார்.

குன்றமாடத்திருக்குருகூர் – ஆழ்வார் பூர்த்தி எல்லைகாணவொண்ணாதாப் போலே, மாடங்களின் உயர்த்தி எல்லைகாணவொண்ணாதபடியிறே யிருப்பது. நம்பி – காலதத்வம் உள்ளதனையும் ஸ்தோத்ரம் பண்ணாநின்றாலும், அளவிடவொண்ணா குணபூர்த்தியையுடையவர்.

குன்றமாடத்திருக்குருகூர் நம்பி என்று மென்னை இகழ்விலன் – பர்வதங்களையொத்த அம்மாடங்களுக்கு சலனமுண்டானாலும் ஆழ்வார் திருவுள்ளம் என்னளவில் சலியாது.

காண்மினே – பகவத் குணங்களை ஆராயும் நீங்கள் ஆழ்வார் குணங்களை காணமாட்டீரோ?

7. கண்டு கொண்டென்னைக் காரிமாறப்பிரான்
பண்டை வல்வினை பாற்றி யருளினான்
எண்டிசையு மறிய வியம்புகேன்
ஒண்டமிழ்ச் சடகோபனருளையே.

என் துர்க்கதி கண்டு என்னுடைய ஸகல ப்ரதிபந்தங்களையும் போக்கின ஆழ்வாருடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தை எல்லோரும் அறியும்படி ஸுப்ரஸித்தமாக்குவேன். 'கு₃ரும் ப்ரகாஶயேந் நித்யம்' என்கிற அநுஷ்டானம் பண்ணக் கடவேன் என்கிறார்.

பகவத் விஷயத்திலே பரத்வபுத்தி, தேவதாந்தரங்களில் பரத்வபுத்தி நிவ்ருத்தி, அப்பரவஸ்துவின் பக்கல் ததீயஶேஷத்வ பர்யந்தையான ஶேஷத்வ புத்தி, விஷயாந்தர விரக்தி, பகவத்விஷய விச்லேஷத்தில் தரைப்படும்படியான ப்ராவண்யாதிஶயம், அவன் பக்கல்

விஶ்வாதிசயம், ஸம்ஸார பீதி, புருஷார்த்த லாபத்தில் அதிஶயித த்வரை, அர்ச்சாவதாரங்களில் ப்ராவண்யம் என்றாப்போலே சொல்லுகிற ஆத்மகுணங்களிற் காட்டில், 'வீடுமின் முற்றவும்' தொடங்கி 'கண்ணன் கழலிணை' யீறாக பலவிடங்களில் ஸம்ஸாரி சேதனருடைய துர்க்கதி கண்டு பொறுக்கமாட்டாமே உபதேஶிக்கைக்கடி க்ருபையாகையாலே, ஆழ்வாருடைய அந்த க்ருபா ப்ரபாவத்தை எல்லாருமறியும்படி வெளியிடக்கடவேன் என்கிறார்.

ஈஶ்வரன் நிரதிஶய க்ருபாவானாயிருந்தாலும், ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டனாகையாலே தோஷ தர்ஶனத்தாலே உபேக்ஷிப்பதும் உண்டு. ஆழ்வாரோ பற்றினாரை இகழாதவராயிற்று. ஆழ்வாருடைய ஜ்ஞானபக்தி வைராக்யங்களிலும், க்ருபையைக் கொண்டாடும்படி க்ருபாகுணத்துக்கு அதிஶயமுண்டு. ஆழ்வாருடைய ஜ்ஞானம் தத்வத்ரய விஷயமாயிருக்கும். பக்தி ஈஶ்வரைக விஷயமாயிருக்கும். விரக்தி ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள் விஷயமாயிருக்கும். க்ருபை துர்க்கத விஷயமாயிருக்கும். ஈஶ்வர க்ருபையிற்காட்டில் ஆழ்வார் க்ருபையினுடைய தன்னேற்றத்தை இப்பாட்டாலே அருளிச் செய்கிறார்.

கண்டு கொண்டென்னை – பார்க்கவொண்ணாத வென்னைப் பார்த்தார். எல்லாரும் கைவிட்ட என்னைக் கைக்கொண்டார். இவர் ஸ்வீகரித்தால், அவனாலும் விடப்போகாதே.

காரிமாறப்பிரான் – கைக்கொண்டது ஆழ்வாருடைய தான்தோன்றியான பிரானன்று. பொற்காரியார் திருக்குமாரராய் அபிஜாதரான ஆழ்வார். தான் பிறந்து, என் பிறப்பை அறுக்க உபகரித்தவரிறே.

பண்டை வல்வினை பாற்றியருளினான் – ஸ்வரூபாநுபந்தியோ எனும்படி இவ்வாத்மாவோடே பழகிப்போந்த பாபம். வல்வினை – ஸர்வபூத ஸுஹ்ருத்தான ஈஶ்வரனும் ஸௌஹார்த்தத்தை பொகட்டு 'க்ஷிபாமி' எனும்படியான பாபம். வல்வினை – ஆழ்வார் ஒரு கடாக்ஷம் நேரவேண்டும்படியான பாபம்.

பாற்றியருளினான் – 'சும்மெனாதே கைவிட்டு தூறுகள் பாய்ந்தனவே' என்கிறபடி பாபக்கூட்டங்கள் வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ கானோ ஒருங்கிற்று கண்டிலமால் – எந்த தூறிலே புக்கது என்று தேடும்படி பண்ணினார். தீயினில் தூசாகும் என்கிறபடி உருமாய்ந்து பிணமுகம் காணவொண்ணாதபடி போக்கியருளினார்.

அருளினான் – தம்முடைய குணஸ்துதியே எனக்கு யாத்ரையாம்படி பண்ணினார்.

எண்டிசையும் அறியவியம்புகேன் ஒண்தமிழ் சடகோபன் அருளையே – ஒண்தமிழ் ஒள்ளிய தமிழ். அழகியதமிழ். 'யதோ வாசோ நிவர்த்தந்தே' எனும் விஷயத்தை ஸர்வாதிகாரமாக்குகையாலே ஒண்டமிழ். சடகோபன் அருள் – திருவாய்மொழி பாடின அருளுக்கு மேலேயிறே என்னை விஷயீகரித்த அருள்! ஈஶ்வரனுடைய அருளும் தப்பின எனக்கு அருளின அருளிறே.

எண்டிசையும் அறிய வியம்புகேன் - 'வக்தவ்யம் ஆசார்ய வைபவம்' என்கிறபடி ஆழ்வாருடைய க்ருபா ப்ரபாவத்தையும், கருணையாலே தன்னைத் திருத்தினபடியையும், தன் பாபம் போனபடியையும், தம் அபிமதம் ஸித்தித்தபடியையும், திருவாய்மொழி பாடி லோகத்தை திருத்தினபடியையும் - இவையாயிற்று இவர் இயம்புகிறது. இவற்றை நாடுநகரமுமறிய, *ஸ்ரீஜாம்பவாந் மஹாராஜர் த்ரைவிக்ரம ப்ரஶம்ஸையை பறைசாற்றிக் கொண்டு திரிந்தாப்போலே, எட்டு திக்குகளிலும் பறைசாற்றி வெளியிடக் கடவேன் என்கிறார்.

8. அருள்கொண்டாடு மடியவரின்புற
அருளினான் அவ்வருமறையின் பொருள்
அருள்கொண்டாயிர மின்தமிழ்ப் பாடினான்
அருள்கண்டீரிவ்வுலகினில் மிக்கதே.

அருள் கொண்டாடும் அடியவர் இன்புற - ஆழ்வார் திருவாய்மொழி பாடினது பகவத் ப்ரீதிக்காகவன்று. ஸாத்விகர் உகப்பதற்காகவாயிற்று பாடியது.

அடியவர் – 'ஶேஷ வ்ருத்தி புருஷார்த்தம்' என்று ஸ்வரூப ஜ்ஞாநம் பிறந்தவர்கள். அருள் கொண்டாடும் அடியவர் – 'அதுவும் அவனது இன்னருளே' என்கிறபடி அப்புருஷார்த்தத்திற்கு ஸாதனம் ஈஶ்வரன் க்ருபையே என்றிருக்குமவர்கள். ஆக, கைங்கர்யம் புருஷார்த்தம்; கருணை ஸாதனம் என்றிருப்போர்.

அருள் கொண்டாடும் அடியவர் – 'அருள் பெறுவார் அடியார்' 'ஆனைக்கன்றருளையீந்த' 'நின்னருளே புரிந்திருந்தேன்' 'அருள்புரிந்த சிந்தை' என்று இப்படிகளால் அவனருளைக் கொண்டாடுமவர்கள். அல்லாத குணங்களிற்காட்டில் க்ருபையைக் கொண்டாடுவதற்கு ஹேது – இது கூடினவாறே குணாந்தரங்களும் கார்யகரமாகும். இது இல்லாதபோது குணாந்தரங்கள் ஜீவியா. க்ருபையும் குணங்களில் சேர்ந்ததன்றோ? குணாந்தரங்களுக்கு இதன் ஸஹகாரம் வேணுமோ? என்னில், வேணும். மனஸ் தத்வம் இந்திரியங்களில் ஒன்றாயிருக்கச் செய்தே, இது ஸஹகரியாதபோது இந்திரிய வியாபாரம் கூடுவதில்லையிறே. ஈஶ்வரன் க்ருபையைக் கொண்டிறே பலப்ரதனாவது. பாழியான் ஆழியான் அருளே நன்று. பாழியான் - ப$_3$லத்தையுடையவன். ஆழியான் - திருவாழியை உடையவன். ஶக்தியும் பரிகரமும் இருப்பினும் அவன் க்ருபையே ஸாதனம். உபாயாந்தரங்களை அநுஷ்டிக்கவியலாத அசக்தனுக்கொழிய சக்தனுக்கும் க்ருபை வேணுமோ யென்னில் - க்ருபை இருவருக்கும் வேண்டும். அங்கு அவன் அனுஷ்டானம் கண்டு பிறக்கிற க்ருபை. அசக்தன் திறத்தில் ஆகிஞ்சந்யம் கண்டு பிறக்கிற க்ருபை. ஸ்வகதமானதொன்று ஸாதனமாக வேண்டாவோ?

---

* தே$_3$வா: ஸ்வ ஸ்த$_2$ானம் ஆயாந்தி, நிஹதா தை$_3$த்ய த$_3$ானவா: | ந ப$_4$யம் வித்$_3$யதே கிஞ்சித், ஜிதம் ப$_4$கவதா ஜக$_3$த் || (தேவர்கள் மீண்டும் தம்மிடம் செல்கின்றனர். அசுரர்கள் கொல்லப்பட்டனர். இனி கொஞ்சமும் அச்சம் யாருக்குமில்லை. லோகம் முழுவதும் பகவானால் தன் வசமாக்கிக் கொள்ளப்பட்டது) என்று திருவிக்ரமன் உலகளந்த ஸமயம் ஜாம்பவான் பறையடித்தபடி.

பரகதமான குணம் ஸாதனமாம்படியென் என்னில் 'அருள் பெறுவார் அடியார்' என்கிறபடி பரகத ஸ்வீகாரத்தில் ஆஶ்ரயம் அவனாய், விஷயம் இவனாயிருக்கும்.

அடியவர் இன்புற - அவர்கள் பண்டே அருள் கொண்டாடும் அடியவரேயாகிலும், இவ்வர்த்தம் ஆப்தரான நம் ஆழ்வாரால் அருளிச்செய்யப் பெற்றோமே. ராகஸித்தம் விதி ஸித்தமாகப் பெற்றோமே என்று ஹ்ருஷ்டரானபடி.

அருளினான் அவ்வருமறையின் பொருள் - (அருமறை) அவனைப் பெறினும் பெறுதற்கரிதாயிறேயிருப்பது. அருமறையின் பொருளாவது - கைங்கர்யம் புருஷார்த்தம்; கருணை ஸாதநம் என்பது. 'வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்' 'அடியையடைந்து அருள்சூடி உய்ந்தவன்' என்பதாய் உபதேஶிக்கை. ப்ரவ்ருத்திஶீலர்க்கு (உபாஸகர்க்கு) நெஞ்சில் படவரிதான அர்த்தத்தை, ருசியுண்டான ஸத்துக்களுக்கு அருளினார்.

வேதம் ஸ்வார்த்தத்தை போதியாதோ? இவர் வெளியிட வேணுமோ? என்னில் (மறை) ரஜஸ்தம: ப்ரசுரர்க்கு ஸ்வார்த்தத்தை மறைக்குமிறே. இவ்வர்த்தத்தை வெளியிட்டவிதம் என்னென்னில், (அருள் கொண்டு ஆயிரமின்தமிழ் பாடினான்) ஸாமவேதம் ஸஹஸ்ரசாகையாயிருப்பதுபோல் ஸாமவேத ஸ்தானமாயிருக்கும் திருவாய்மொழியை ஸர்வாதிகாரமாய், *'பாட்₂யே கே₃யே ச மது₄ரம்' என்கிறபடி செவிக்கினிய செஞ்சொலாலே ஆயிரம் பாட்டாய் அருளிச்செய்தார். தன் அநுபவாநந்த ஸாகரத்துக்கு பரீவாஹ சுபவசனங்களைப் பண்ணினார். ஓராத்மாவின் ஹிதாம்ஶத்துக்கு ஒரு பாட்டே அமையும்படியிறே இவர் பாடிற்று.

அருள்கொண்டு ஆயிரமின்தமிழ் பாடினான் - இவர்தாம் ஸ்வபுத்தியால் அருளிச்செய்தாரன்று. 'மயர்வற மதிநலமருளினன்' என்கிறபடி அவனருளடியாக வந்ததிறே! 'எந்நாமுதல்வந்து புகுந்து நல்லின்கவி தூமுதல் பத்தர்க்குத் தான் தன்னைச் சொன்ன என் வாய்முதலப்பனை' என்றபடி கவிபாடுவித்துக் கொண்டான். 'யானாய்த் தன்னைத் தான்பாடி' என்கிறபடி எம்பெருமானே ஆழ்வார்வாக்கில் நின்றுபாடிய ப்ரபந்தமிறே! எம்பெருமான் ஆழ்வாரை வியாஜமாகக் கொண்டு தானே தன்னைப் பாடிக்கொண்டதாலிறே இது திருவாய்மொழியாயிற்று. பெருமான் முன்னுருச் சொல்ல, ஆழ்வார் பின்னுருச் சொன்னார்.

அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே - ஈஶ்வரன் கைவிட்ட ஆத்மாக்களையும், அவர்களுடைய துர்க்கதியைக் கண்டு திருத்த முற்பட்டபடியாலே ஆழ்வாருடைய அருளே இந்த லோகத்தில் ஸாம்ராஜ்யம் பண்ணுகிறது. ஸ்ரீகீதாசார்யன் நெறியெல்லாம் எடுத்துரைத்தவிடத்திலும் அகப்பட்டாரும் அகப்படாதாருமாயிற்று. ஆனால் இவர் அருள் 'ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய பேரும் தார்களுமே' பிதற்றப் பண்ணிற்று.

* பாடத்திலும் கானத்திலும் கேட்பதற்கு மதுரமாயிருக்கும்.

ஸ்ரீகீதை சொன்ன க்ருஷ்ணன் என்றால் கையெடுப்பார் இல்லை. திருவாய்மொழி பாடின ஆழ்வாருடைய ஊரின் பேரைக் கேட்கவே, இருந்ததே குடியாக கையெடாநின்றது. கண்டீர் - இது ப்ரத்யக்ஷம்.

9. மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள்
நிற்கப்பாடி யென்னெஞ்சுள் நிறுத்தினான்
தக்கசீர்ச் சடகோபனென்னம்பிக்கு ஆள்
புக்ககாதலடிமைப் பயனன்றே.

ஆசார்யனுக்கு க்ருபையே வேஷமாய், ஶிஷ்யனுக்கு க்ருதஜ்ஞதையே வேஷமாயிருக்கும்.

வேதியராகிறார் – வேதப்ரமாண நிஷ்டர்கள். பாஹ்ய ஶாஸ்த்ரங்களில் கண்வையாதே, 'வேதாஸ் ஶாஸ்த்ரம் பரம் நாஸ்தி' வேதத்துக்கு அவ்வருகு ப்ரமாணமில்லை என்றிருப்போர்.

மிக்க வேதியராகிறார் – அவ்வேதத்திலும் அல்பாஸ்த்திரங்களான ஸ்வர்க்காதி புருஷார்த்தங்களையும் தத்ஸாதனங்களையும் ப்ரதிபாதிக்கிற பூர்வகாண்டத்தில் ஆதரமின்றி, 'பகவத் ப்ராப்தியே புருஷார்த்தம்; அதற்கு சரம ஸாதனம் ஶரணாகதியே' எனும் வேதாந்தபாக நிஷ்டர்.

வேதத்தின் உட்பொருள் – 'வேதைஶ்ச ஸர்வைர் அஹமேவ வேத்ய:' என்றும் 'வேதாந்த விழுப்பொருள்' என்றும் சொல்லுகிறபடியே ஸகலவேதங்களும் ஒரு மிடறாக ஓதித்தலைக்கட்டுவது பகவத் ஸ்வரூபாதிகளையிறே. உட்பொருள் – அதில் பகவத் விஷய ப்ரதிபாதகமான அம்ஶம் புறப்பொருளாய், ததீய ப்ரதிபாதகமான அம்ஶம் உட்பொருளாயிருக்கும். புறப்பொருளையே சொல்லி விடுகையன்றிக்கே, அதுக்கு ஹ்ருதயமான ததீய வைபவத்தை 'பயிலும் சுடரொளி' 'நெடுமாற்கடிமை' இரண்டாலும் அருளிச்செய்தாரிறே. வேதாந்த ரஹஸ்யம் ததீய ஶேஷத்வ பர்யந்தமான பகவச் சே$_2$ஷத்வமிறே.

நிற்கப்பாடி – இந்த ரஹஸ்யார்த்தத்தை கேட்பவர் நெஞ்சிலே நிற்கும்படி பாடி. கல்லைக் குழித்து நீரை நிறுத்துவாரைப்போலே கிடீர் செய்தது.

என் நெஞ்சுள் நிறுத்தினான் – பகவச்சே$_2$ஷத்வத்துக்கும் மேட்டுமடையான என் நெஞ்சிலே ஸுப்ரதிஷ்டமாம்படி பண்ணினார். என் தண்மை பாராதே, என் திறத்தில் பண்ணின உபகாரம் இதிறே. வேதார்த்தங்கள் திருவாய்மொழியிலே நிற்கப்பாடி, அத்திருவாய்மொழியின் அர்த்தங்களை என் நெஞ்சிலே சேர்த்தார். ஆசார்ய வைபவம் கைப்பட்டவனுக்காய்த்து, ஸகல வேதார்த்தங்களும் கைப்படுவது. வேதம் என்கையாலே ப்ரமாண வைபவம். வேதியர்

என்கையாலே ப்ரமாத்ரு வைபவம். பொருள் என்கையாலே ப்ரமேயமான பகவத் வைபவம். உட்பொருள் என்கையாலே அபிமதமான ததீய வைபவம். இப்படி ப்ரமாண, ப்ரமேய, ப்ரமாத்ரு, அபிமத வைபவங்களை நெஞ்சிலே படும்படி பூர்ணோபதே*ஶ*ம் பண்ணினார்.

தக்கசீர்ச் சடகோபன் என் நம்பி – உபதே*ஶ*ம் பண்ணத்தக்க ஜ்ஞான பூர்த்தியையுடைய ஆழ்வார். 'அயர்வறும் அமரர்கள் அதிபதி' என்றால் போரும்படி ஸர்வே*ஶ்*வரன் இருக்குமாபோலே, 'ஏற்கும் பெரும்புகழ் வண்குருகூர்ச் சடகோபன்' என்றபடி எல்லா மேன்மையும் சொன்னாலும் தகுதியான ஆழ்வார். ப்ரபாவம் எல்லைகாண வொண்ணாதபடியிறே ஆழ்வார் பூர்த்தியிருப்பது.

ஆள்புக்க காதல் – ஆழ்வார் விஷயத்தில் அடிமை செய்வதற்குறுப்பான ருசி. அடிமைப்பயன் அன்றே – அந்த க்ஷணத்திலேயே கைங்கர்யத்தை ப்ரயோஜநமாக உடைத்தாயிருக்கும்.

முற்பட அடிமை புக்கு, அனந்தரம் ஆதரம் நடந்து, பின்பு அடிமை செய்யுமதுவே அவருக்கு ப்ரத்யுபகாரம். ஆழ்வார் பகவச்சே$_2$ஷத்வத்தையும், பகவத் ப்ரேமத்தையும், பகவச்சே$_2$ஷ வ்ருத்தியையும் உபதே*ஶி*த்தார். ஸ்ரீமதுரகவிகள் உட்பொருளான பகவத் விஷயந்தன்னை புறப்பொருளாக்கி, அதிலும் உட்பொருளான ஆழ்வார் திருவடிகளிலே சேஷபூதராய், ப்ரேம பூர்வகமான கைங்கர்யத்திலே இழிகிறாராய்த்து.

10. பயனன்றாகிலும் பாங்கலராகிலும்
செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்வான்
குயில் நின்றார் பொழில்சூழ் குருகூர்நம்பி
முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே.

இப்பாட்டில் 'வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி என்நெஞ்சுள் நிறுத்தினான்' என்று ஆழ்வார் பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் தேடிக் காணாமையாலே தடுமாறுகிறார்.

முமுக்ஷுதஶையோடு முக்த தஶையோடு வாசியற உபகார ஸ்ம்ருதி நடக்குமது போக்கி ப்ரத்யுபகாரம் பண்ணவொண்ணாதிறே, உபகார கௌரவம் ப்ரத்யுபகாரமில்லாதபடி.

சிரகாலம் *ஶு*ச்ருஷை பண்ணிப்போந்தவனுக்கிறே பகவத் விஷயத்தை உபதே*ஶி*க்கைக்கு யோக்யதையுள்ளது. ஸ்ரீக்ருஷ்ணனும் '*ஶி*ஷ்யஸ்தேऽஹம் *ஶா*திமாம் த்வாம் ப்ரபந்நம்' என்றபின்பிறே உபதே*ஶி*த்தான்! இவர் அப்படியன்றிக்கே இத்தலையிலொரு நன்மை பாராது துர்க்கதியே பற்றாசாகவிறே உபதே*ஶி*ப்பது.

பாங்கலராகிலும் – இத்தகைய *ஶு*ச்ருஷையாகிற அதிகாரமில்லாதிருப்பினும், சொல்லுகிற ஹிதம் கேட்கைக்கு பாங்காயிருக்கலாமிறே. அங்ஙன் பாங்கலராகிலும்.

செயல் நன்றாகத் திருத்தி - இப்படிப்பட்டவர்க்கு ஹிதம் சொல்லவேணுமோ என்னில், இவர்கள் அனர்த்தம் பொறுக்கமாட்டாதே சொல்கிறார். ராவணனுடைய துர்த்தஶையைக் கண்டு பொறுக்கமாட்டாதே, 'மித்ரம் ஔபயிகம் கர்த்தும்' என்று ஹிதம் சொன்னாளிறே. அநுஷ்டான பர்யந்தமாக உபதேஶித்துத் திருத்தி, உபதேஶித்த அர்த்தம் நெஞ்சில்பட்டு அத்யவஸாய பர்யந்தமாய் ஸத்அநுஷ்டானமேயாம்படி திருத்தி. முற்பட ஶ்ரவணம், கேட்ட அர்த்தத்தில் மநநம், பின் அதில் மஹாவிஶ்வாஸம், பின் அநுஷ்டானம், அதுவும் அஸத் அநுஷ்டானம் கலசாதே ஸதநுஷ்டானமேயாய் போருகையிறே செயல் நன்றாகத் திருத்துகையாவது.

பணிகொள்வான் - பகவத் பாகவத விஷயங்களில் கிஞ்சித்கரிக்கும்படி செய்தார். பகவத் கிஞ்சித்காரமும் வேணும். வைஷ்ணவ கிஞ்சித்காரமும் வேணும். ஆசார்ய கிஞ்சித்காரமும் வேணும். ஸ்வரூபம் (சேஷத்வம்) பகவத் கைங்கர்யத்திலே மூட்டும். பகவத் ப்ரீதி வைஷ்ணவ கிஞ்சித்காரத்திலே மூட்டும். *நா கிஞ்சித் குர்வத: ஶேஷத்வமிறே! பகவத் பாகவத வைபவங்களை உபதேஶித்த உபகார ஸ்ம்ருதியால் வந்த இவனுடைய ப்ரீதி ஆசார்ய கைங்கர்யத்திலே மூட்டும்.

பணிகொள்வான் குருகூர் நம்பி - அவன் 'தீர்ந்த வடியவர் தம்மை திருத்திப் பணி கொள்வான்'; இவர் †கருந்தரையிலே திருத்துமவராய்த்து. 'ப்ராப்யமும் ப்ராபகமும் தானே' என்று அத்யவஸித்திருக்குமவர்களுடைய விரோதியைப் போக்கி அடிமை கொள்வன் அவன். அங்ஙனன்றிக்கே, அவையொன்றுமின்றிக்கே யிருக்குமவர்களை திருத்திப் பணிகொள்ளுமவர் ஆழ்வார். அவ்வதிகார நிஷ்பத்திதன்னையும் கொடுத்தாய்த்து இவர் அடிமை கொண்டது!

குயில் நின்றார் பொழில்சூழ் குருகூர் நம்பி - இவர் பாசுரம் கேட்ட குயில்களும் திருவாய்மொழியைப் பாடும். ஶாகா ஸம்பந்தமுண்டாகையாலே, அவை ஸஹஸ்ரசாகையைப் பாடி நிற்கும். ஒரு தேஶ ஸம்பந்தத்தால் குயில்களும் நான்மறை பாடுமானால், இத்தேஶவர்த்திகளுக்கு திருவாய்மொழி பாடச்சொல்லவேணுமோ? 'ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல்' என்று திர்யக்குகள் அளவிலும் ஏறும்படியாய்த்து ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது!

முயல்கின்றேன் உன்தன் மொய்கழற்கன்பையே – உன்தன் திருவடிகளில் ஶ்லாக்யமான ஸ்நேஹத்தைப் பண்ணுகைக்கு யத்னிக்கிறேன். கீழே, 'பொன்னடி' அன்று ஆழ்வார் திருவடிகளின் பாவநத்வம் சொன்னார். இங்கே போக்யதையைச் சொல்கிறார். 'என்னைத் தீமனம் கெடுத்தாய் உனக்கென் செய்கேன்' என்று பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் காணாமையாலே தடுமாறுகிறார்.

---

* கைங்கர்யம் செய்யாதவனுக்கு சேஷத்வம் இல்லை.

† பாழ்நிலம்

11. அன்பன்தன்னை யடைந்தவர்கட்கெல்லா
மன்பன் தென்குருகூர்நகர் நம்பிக்கு
அன்பனாய் மதுரகவி சொன்ன சொல்
நம்புவார் பதி வைகுந்தம் காண்மினே.

அன்பன் - வத்ஸலன். இன்னானுக்கு அன்பன் என்று விஶேஷியாமையாலே, ஸ்நேஹிக்குமிடத்தில் விபூதியாக ஸ்நேஹிக்கும். ஸௌஹார்த்த கார்யமிறே வாத்ஸல்யம். ஶரணாகத வத்ஸல:, ரிபுணாமபி வத்ஸல: எனும்படி அநுகூல ப்ரதிகூல விபாகமற எல்லாரிடத்திலும் வத்ஸலனாயிருக்கும். ஆஶ்ரிதர் அளவிலே 'தோஷோயத்யபி' எனும்படி வத்ஸலனாயிருக்கும். 'ப்ரதிபவம் அபராத்துர் முக்த ஸாயுஜ்யதோபூ:' என்று ப்ரதிகூலரிடமும் வத்ஸலனாயிருக்கும். மௌக்த்யமாவது தோஷம் நெஞ்சில் படாதொழிகை. இப்படி அவனுடைய வாத்ஸல்யம் ஸர்வவிஷயமாய் பொதுவாயிருப்பதற்கு ஹேது - 'ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதாமாதாச மாதவ:' என்றும் 'தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்ய மதி தைவதம்' என்றும் ஸம்பந்தம் ஸர்வ ஸாதாரணமாகையாலே.

(அன்பன்) தன்னைப்பற்றி, புறம்பே சிலவற்றை ஆசைப்பட்டவர்களுக்கும், உதாரா: என்று குணங்கொள்ளும் வ்யாமோஹத்தையுடையவன்.

அன்பன்தன்னை யடைந்தவர்கட்கெல்லாமன்பன் - ஆழ்வாருடைய அன்பு அங்ஙன் பொதுவாயன்று இருப்பது. வைராக்ய பூர்வகமான ஸ்நேஹமிறே. ஸர்வலோக வத்ஸலனான ஸர்வேஶ்வரனுடைய குணத்துக்குத் தோற்று அவன் திருவடிகளை ஆஶ்ரயித்திருக்கும் ஸாத்விக வர்க்கத்துக்கு ஸ்நிக்த்தராயிருப்பவர். அவன் எல்லாரையும் ஸ்நேஹிக்கும், எல்லாரோடும் பந்தமுண்டாகையாலே. இவர் 'பரமனைப் பயிலும் திருவுடையார் யவரேலுமவர் கண்டீர் என்னையாளும் பரமர்' என்றிருப்பாராய்த்து.

அடைந்தவர்கட்கெல்லாமன்பன் - அவனை ஶேஷியாக வரிக்கவுமாம்; பந்துத்வேந வரிக்கவுமாம்; உபாயத்வேந வரிக்கவுமாம்; உபேயத்வேந வரிக்கவுமாம். இவருக்கு ஆதரிக்க வேண்டுவது ஏதேனுமொரு ஸம்பந்தமாய்த்து.

தென்குருகூர் நகர் நம்பிக்கன்பனாய் - திருக்குருகூரில் பிறந்த ஆத்மகுண பூர்ணரான ஆழ்வாருக்கே அன்பராய். 'அடியார் அடியார் தம்மடியார் அடியார்' என்று தத்ஸம்பந்திகள் அளவும் பண்ணின ப்ரேமத்தாலே பூர்ணரான ஆழ்வாருக்கு அன்பராய். 'நெஞ்சுக்குப் பணி ஆழ்வார் பக்கல் ஸ்நேஹம்; வாய்க்குப்பணி அவருடைய குண ஸ்தோத்ரம்' என்றிருப்பவர்.

நம்பிக்கன்பனாய் - பகவத்விஷயத் தளவிலன்றிக்கே ததீயர் அளவிலும் அன்றிக்கே, ஆசார்ய விஷயத்திலே ஸக்தராய். தனக்குப் புருஷார்த்தம் வேண்டியிருக்கில் பகவத் விஷயத்தைப் பற்றவடுக்கும். தானுகந்தது அன்றிக்கே ஈஶ்வரனுகப்பே புருஷார்த்தமென்றிருக்கில், பாகவதர்களைப் பற்றவடுக்கும். 'ஜ்ஞாநீ து ஆத்மைவமே

மதும்' 'மம ப்ராணாஹி பாண்டவ:' என்று அவர்களைத் தனக்கு தாரகமாகவிறே அவன் நினைத்திருப்பது. ஈஶ்வரனோடு ஸ்ரீவைஷ்ணவர்களோடு வாசியற எல்லோருடைய உகப்பும் புருஷார்த்தமென்றிருக்கில், ஆசார்யனைப் பற்றவடுக்கும். *'ஆசார்யவாந்' என்றாய்த்து ஸ்ரீவைஷ்ணவர்கள் இருப்பது. ப்ரதமத்திலே ஆசார்யன் †அஜ்ஞாத ஜ்ஞாபந முகத்தாலே ஸ்வரூப ஜ்ஞாநத்தை பிறப்பிக்கைக்கும், தன் அநுஷ்டானத்தாலே இவனை நல்வழி படுத்துகைக்கும் உத்தேஶ்யனாம். பின்பு பகவத் குணங்களிலே அவகாஹித்து போ$_3$த$_4$யந்த: பரஸ்பரம் பண்ணுகைக்கு உசாத்துணையாம். அதற்குமேல் பிராட்டி பரிகரமாகையாலே, பகவத் ப்ராப்திக்கு புருஷகார பூதனாய் உத்தேஶ்யனாம். ப்ராப்தி தஶையிலே ‡ஸாத்$_4$ய விவ்ருத்$_4$தி$_4$ ரூபத்தாலே உத்தேஶ்யனாம்.

மதுரகவி – ஆழ்வார் ஈஶ்வரனைக் கவி பாடுகையாலே 'என் நாவின் இன்கவி' என்றார். இவர் அவ்வாழ்வாரை கவிபாடுகையாலே தம்மை மதுரகவி என்கிறார்.

மதுரகவி சொன்ன சொல் – இந்த ஶப்த ஸந்தர்ப்பத்தில் நசையுடையராய் இதில் ஓடுகிற ஆழ்வாருடைய ப்ரபாவங்கள்.

நம்புவார் – 'ஸத்யம்' என்று இவ்வர்த்தத்தை தங்களுக்கு தஞ்சமாக விஸ்வஸித்திருப்போர். நம்புவார் பதி வைகுந்தம் காண்மினே – அவர்களுக்கு வஸ்தவ்ய பூமி பரமபதம். இது வ்யாஹத பாஷணமாயிருந்ததீ. ஆழ்வாரை ப்ராப்யமாகச் சொன்னால், திருநகரியே ப்ராப்ய தேசமாக வேண்டாவோ வென்னில், திருநகரியிலே ஆழ்வார் ஆணையும் பொலிந்துநின்றபிரான் ஆணையுமாய் இரு புரியாய்த்து செல்வது! அங்ஙனன்றியே, 'அடியார் நிலாகின்ற வைகுந்தம்' என்கிறபடி ஆழ்வார் ஆணையே செல்லும் தேஶம் பரமபதம் என்றுமாம்.

அதவா, நம்புவார் இருந்தவிடமே வைகுந்தமாம். அதென்? திருநாடென்றும், லீலாவிபூதியென்றும் விபாகமில்லையோயென்னில் – 'கூரத்தாழ்வான் மகன் பிறந்த பின்பு ஸம்ஸாரத்திற்கும் பரமபதத்திற்குமுள்ள இடைச்சுவர் தள்ளுண்டு ஒரு போகியாய்த்துக் காண், அங்குத்தையநுபவம் இங்கே கிட்டுகையாலே' என்று பணிப்பராம் முதலியாண்டான் சிஷ்யரான நம்பி திருவழுதி வளநாடு தாஸர்.

கண்ணிநுண்சிறுத்தாம்பு உரை முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

* ஸதாசார்ய ஸம்பந்தம் பெற்றவன்

† அறியாதன, அறிய வேண்டுவன இவற்றை அறிவிக்கை

‡ நம் ஸ்வரூபம் (ஶேஷத்வம்) ஸாத்ய வஸ்துவான பகவத் கைங்கர்யத்திலே மூட்டும். ஆயினும் எம்பெருமான் உகப்பது ததீய விஷயத்தில் பண்ணும் பணியாம் (ஸாத்ய வ்ருத்தி). பாகவதர் உகப்பதோ ஆசார்ய கைங்கர்யமாகையால், ஸாத்ய வ்ருத்தியின் விசேஷ நிலை – ஸாத்ய விவ்ருத்தி – சரமபர்வ (ஸ்வாசார்ய விஷயத்தில் பண்ணும்) கைங்கர்யம். ப்ராப்தி தஶையாவது – சரணாகதி செய்த பிறகு ப்ரபந்நன் இவ்வுலகில் இருக்கும் நாள்.

# மதுரகவிகளும் நம்மாழ்வாரும்

ப்ரதம பர்வமான பகவத் விஷயத்திலே நம்மாழ்வார் பண்ணும் அநுஸந்தான ப்ரகாரத்தை, மதுரகவிகள் சரமபர்வமான ஸ்வாசார்ய விஷயத்தில் பண்ணுகிறார். பரமாசார்யரான நம்மாழ்வாரே ஸாக்ஷாத் பகவான் என்றும், அவர் திருவடிகளே உபாயமென்றும், அவர் திருவடிகளில் பண்ணும் கைங்கர்யமே புருஷார்த்தமென்றும், அவருடைய முகோல்லாஸமே பரம ப்ரயோஜநமாகவும், அவரெழுந்தருளியிருக்கிறவிடமே ப்ராப்ய பூமியாகவும், அவருடைய விக்ரஹாத்யநுபவமே உண்ணும் சோறில்படியே தாரகாதிகளாகவும் ப்ரதிபத்தி பண்ணி விஶ்வஸித்திருக்கும் சரமாதிகாரி ஶேகரராய்த்து ஸ்ரீமதுரகவியாழ்வார்.

| திருவாய்மொழி | கண்ணிநுண்சிறுத்தாம்பு |
|---|---|
| அப்பொழுதைக்கப் பொழுது என்னாராவமுதமே (2.5.4) | அண்ணிக்கும் அமுதூறும் (1) |
| மலக்கு நாவுடையேற்கு மாறுளதோ (6.4.9) | நாவினால் நவிற்றின்பம் எய்தினேன் (2) |
| அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே (6.10.10) | மேவினேன் அவன் பொன்னடி (2) |
| கண்ணனல்லால் தெய்வமில்லை (5.2.7) | தேவுமற்றறியேன் (2) |
| பாடி இளைப்பிலம் (1.7.10) | பாடித்திரிவனே (2) |
| உரிய தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் (6.9.11) | நம்பிக்கு ஆள் உரியன் (3) |
| இங்கே திரிந்தேற்கு (8.10.4) | திரிதந்தாகிலும் (3) |
| தாயாய்த் தந்தையாய் (7.8.1) | அன்னையாய் அத்தனாய் (4) |
| ஆள்கின்றான் ஆழியான் (10.4.3) | என்னையாண்டிடும் தன்மையான் (4) |
| யானே என்தனதே (2.9.9) | நம்பினேன் பிறர் நன்பொருள் தன்னையும் (5) |
| எமர்கீழ்மேல் எழுபிறப்பும் (2.8.1) | இன்று தொட்டும் எழுமையும் எம்பிரான் (6) |
| என்னால் தன்னை இன்தமிழ் பாடிய ஈசன் (7.9.1) | நின்று தன் புகழ் ஏத்த (6) |
| ஒட்டுமோ இனி என்னை நெகிழ்க்க (1.7.7) | என்று மென்னை இகழ்விலன் (6) |
| மயர்வற மதிநலம் அருளினன் (1.1.1) | சடகோபன் அருளையே (7) |
| அருள் உடையவன் (2.10.11) | அருள் கண்டீர் இவ்வுலகினில் (8) |
| பேரேனென்று என் நெஞ்சு நிறைய (10.8.2) | நிற்கப்பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான் (9) |
| வழுவிலா அடிமை செய்ய வேண்டும் (3.3.1) | ஆட்புக்க காதல் அடிமைப் பயன் (9) |
| பொருளல்லாத என்னை ... அடிமை கொண்டாய் (5.7.3) | பயனன்றாகிலும்... பணிகொள்வான் (10) |
| மலர்ப்பாவைக்கன்பாகிய என் அன்பே (10.10.7) | தென்குருகூர் நகர் நம்பிக்கு அன்பனாய் (11) |
| படைத்தான் கவி (3.9.10) | மதுரகவி (11) |
| வைகுந்தமாகும் தம்மூரெல்லாம் (5.3.11) | நம்புவார் பதி வைகுந்தம் (11) |

தீங்கேது மில்லாத தேசிகன்தன் சிந்தைக்குப்
பாங்காக நேரே பரிவுடையோர் – ஓங்காரத்
தேரின் மேலேறிச் செழுங்கதிரினூடு போய்ச்
சாருவரே யந்தாமந்தான். — ஸப்தகாதை 7

(அவத்யங்களேதுமற்ற ஸ்வாசார்யர்களிடம் ப்ரேமம் கனத்திருப்போர், 'வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே' என்கிறபடியே இங்கிருக்கும் நாள் உபயவேதாந்த காலக்ஷேபஸ்ரீயோடும், ததீயாராதநஸ்ரீயோடும், உகந்தருளின நிலங்களில் மங்களாசாஸநஸ்ரீயோடும், தத்கைங்கர்யஸ்ரீயோடும் எம்பெருமானாரைப் போலே நெடுங்காலம் வாழ்ந்திருந்து, சரீராவஸாநத்தில் பரமபக்தி தலையெடுத்து அந்தமில் பேரின்பத்தடியரோடு ஒரு கோவையாயிருக்க வேணுமென்கிற ப்ராப்யத்வரை விஞ்சி ஹார்த$_3$ாநுக்$_3$ரஹ லப்$_3$த$_4$ மத்$_4$யத$_4$மநி த்$_3$வாரா ப$_3$ஹிர்நிர்க$_3$தர்களாய் 'ஓங்கார ரத$_3$மாருஹ்ய' என்கிறபடியே ப்ரவணமாகிற தேரின் மேலேறி தேரார் நிறை கதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு ஆராவமுதமங்கெய்தி வாழ்ந்திருக்கப் பெறுவர்.)

கு$_3$ருணா யோऽபி$_4$மந்யேத கு$_3$ரும் வா யோபி$_4$மந்யதே ।
தாவுபெ$_4$ள பரமாம் ஸித்$_3$தி$_4$ம் நியமாத்$_3$ உபக$_3$ச்ச$_2$த: ॥

ஆசாரியனால் எவன் அபிமானிக்கப்படுகிறானோ, ஆசார்யனை எவன் அபிமானிக்கிறானோ, அவ்விருவரும் பரமபதத்தை க்ரமமாக அடைகிறார்கள் என்று ஆசார்ய விஷயத்தில் ஸ்வக$_3$த-பரக$_3$த ஸ்வீகாரங்களிரண்டிலும் பேறு தப்பாதென்று (பாரத்வாஜ ஸம்ஹிதையில்) சொல்லிற்றேயாகிலும், ஆசார்யனை தான் பற்றும் பற்று அஹங்கார க$_3$ர்ப்ப$_4$மாகையாலே ஸ்வரூபத்துக்குச் சேராது என்றும், பரக$_3$த ஸ்வீகாரமே உத்தாரகம் – ஆசார்யனால் 'இவன் நம்முடையவன்' என்று அபிமானிக்கப்படுவதே ஒருவனை கரையேற்றக் கூடியது – என்றும் அறுதியிட்டார்கள்.

'பழுதாகா தொன்றறிந்தேன்' எனும் நான்முகன் திருவந்தாதி (89-வது) பாசுரத்தை ஆசார்ய விஷயத்தில் ஸ்வகத ஸ்வீகாரமாகிற வுபாயத்துக்கு ப்ரமாணமாக அநுஸந்திப்பர். 'நல்ல வென்தோழி' எனும் நாச்சியார் திருமொழி (10-10) பாசுரத்தையும் 'மாறாய தானவனை' எனும் நான்முகன் திருவந்தாதி (18-வது) பாசுரத்தையும், 'அக்ருத்ரிம' என்று தொடங்கும் ஸ்தோத்ர ரத்னத்தின் கடைசி *ஶ்*லோகத்தையும், 'ப*ஶூ*ர் மநுஷ்ய:' என்று தொடங்கும் பாரத்வாஜ ஸ்ம்ருதி *ஶ்*லோகத்தையும் ஆசார்ய விஷயத்தில் பரகத ஸ்வீகாரத்துக்கு ப்ரமாணங்களாக அநுஸந்திப்பர்.



# தெளியாத மறைநிலங்கள் தெளிந்தபடி

வேதத்திற்கு புறம்பாகப் பேசும் மதங்கள் பா3ஹ்ய மதங்கள். வேதத்தை ப்ரமாணமாக ஏற்றுக்கொண்டும் அபார்த்த2ங்களைச் சொல்லும் மதங்கள் குத்3ருஷ்டி மதங்கள். இம்மதங்களை நிரஸித்து பகவானை நிஶ்சயமாக அடையும் வழியைக் காட்டிக் கொடுப்பவர்கள் ஆழ்வார்களேயாவர். த்ராவிட வேதங்களை அத்யாபகம் செய்தே நாம் வேதாத்யயத்தினால் தெளியாத விஷயங்களை அறிந்து கொள்கிறோம். ஆளவந்தார் 'நோத்3யமதோதிஶேரதே' - வேதங்கள் ஆரம்ப அவஸ்தையைக் கடந்து மேல்படி ஏறவில்லை என்று ஸ்தோத்ர ரத்னத்தில் (19) அருளிச் செய்தார். 'நான்மறைகள் தேடி என்றும் காணமாட்டாச் செல்வ'னிறே.

எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் அவனைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டவர்கள். 'அறிந்தன வேத' (9.3.3) எனும் பாசுர வ்யாக்யானத்தில் 'வேதங்களும் வேதார்த்த வித்துக்களான ருஷிகளும் அறிந்தவளவன்றிக்கே தன்னையெனக்கு பூர்ணமாக அறிவித்தானென்று ப்ரீதராகிறார்' என்று அவதாரிகை காண்கிறோம். ருஷிகள் அவனைப் பிறவித் துயருக்கு மருந்தாக அறிந்தார்களொழிய, அவனது போக்யதையில் இழிந்தார்களல்லர். அவனுடைய நிரபேக்ஷோபாய பா4வத்தில் இழிந்தார்களல்லர். இதனால் வேதங்கள் எம்பெருமானை உள்ளபடியே அறியவில்லை என்பதும், எம்பெருமானது நிர்ஹேதுக க்ருபையினால் மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களே எம்பெருமானை உள்ளபடி அறிந்தவர்கள் என்பதும் தெளிவு.

தங்கள் சக்தியாலே பகவானைத் தேடியோடும் வேதங்கள், எங்ஙனம் அவனது ஸ்வரூபரூப குணாதிகளை உள்ளபடியே அநுபவிக்கும் ஆழ்வார்களைப்போலே நிரூபிக்கயியலும்? 'ஊனில் வாழுயிரே நல்லைபோ வுன்னைப் பெற்று, வானுளார் பெருமான் மதுசூதனென்னம்மான், தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம், தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுது மொத்தே' (2.3.1) என்று எம்பெருமான் தன்னுடன் ஸம்ஶ்லேஷித்த ப்ரகாரத்தை யநுஸந்திக்கிறார் ஆழ்வார். மாம்ஸமயமான ஶரீரத்திலே வாழுகிற நெஞ்சே! நல்லைகாண்! நித்யஸூரிகளுக்கும் மேலான மேன்மையுடைய மதுசூதன் என்னுடைய ப்ரதிபந்தகத்தை மதுவை முடித்தாற்போலே முடித்து, என்னை அடிமை கொண்டருளவே, தானும் யானும் ஸர்வரஸங்களும் உண்டாம்படி கலந்தோம். என்றும் இருப்பவன் ஈஶ்வரன். தத் ஸம்பந்தமும் அநாதி. அவன் எதிர்சூழல்புக்கு அவஸரப்ரதீக்ஷனாய் நிற்க, நீ ஆபிமுக்யம் பண்ணாமையாலன்றோ இத்தனை நாள் இழந்து கிடந்தது. கைங்கர்ய ஸாம்ராஜ்யத்துக்கு இட்டுப் பிறந்து வைத்தும், நெடுநாள் ப்ராக்ருத போ4கங்3ளை பு4ஜித்துப் போந்த நீ இன்று அப்ராக்ருத போ4கத்துக்கு கைதர நிற்பதே! என்று திருவுள்ளத்தைக் கொண்டாடுகிறார். வானுளார் பெருமான் – அவன் ஸர்வோத்க்ருஷ்டன். உயர்ந்த கல்யாண குணங்களையுடையவன். மதுசூதன் – ஆஶ்ரித விரோதி நிரஸனம் செய்பவன். ஆழ்வாருடைய திருமேனியை அநுபவிப்பதை அவன் பெரும்பேறாக நினைக்கிறான். பிராட்டியுடன் ஸம்ஶ்லேஷிப்பதிலும் சேதனனுடன் ஸம்ஶ்லேஷிப்பது விசேஷமிறே. 'ராமஸ்து ஸீதயா ஸார்த்த4ம் விஜஹார ப3ஹூந்ருதூந்'. சக்ரவர்த்தி திருமகன் பிராட்டியை அநுபவிக்கக் கோலியிருந்த ப்ரகாரங்கள் முற்றிலும் பூர்ணமாகவில்லை; அநுபவ ப்ரகாரம் ருதுக்கள் மாறுதலையநுஸரித்து மாறி நின்றது. எல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம் – ஸர்வ விதமான அநுபவமும் அநுபவித்து முடிந்ததாயிற்று. எல்லாம் – இனி வேறு ஒரு ப்ரகாரம் இல்லாதபடி அந்யோந்யமாகக் கலந்து நின்றோம். ஶ்ருதியில் பூ4மா ஶப்தத்தின் அர்த்தத்தை இங்கு மிகவும் ஸுலபமாய் 'எல்லாம்' என்றருளிச் செய்தபடி.

ஶ்ருதி ஜலம், எண்ணை முதலானவற்றை உதாஹரணமாகக் காட்டிற்று. ஶ்ருதியில் சொல்லப்பட்ட உபமானங்களை விட்டு பகவதநுபவத்திற்கு ஸத்ருஶமாய் கேட்கும்போதே நாக்கில் நீர் ஊறும்படி உதாஹரணங்களைக் கொண்டு நிரூபிக்கிறார் தேனும் இத்யாதியால். ஒன்றை த்ருஷ்டாந்தமாகக் கொடுத்தால் அநுபவம் ஒரு ப்ரகாரமாய்த்தான் நின்றது என்றேற்படும். அது பஹுப்ரகாரமாயிருந்ததை தெரிவிப்பதற்கு இந்த அநேக த்ருஷ்டாந்தங்கள். இத்தகைய விசேஷார்த்தங்களை த்ராவிட வேதத்திலேயே காணயியலும்.

வேதங்கள் மீமாம்ஸ ந்யாய விசாரம் செய்து பரதத்வத்தை நிரூபிக்கும்படி ஓதிப்போந்தன. ஆழ்வாரோ 'ஒன்றும் தேவும்' இத்யாதிகளில் ஸம்ஶய விபர்யயங்களற ஸுலபமாய் பரதத்வ நிர்ணயம் செய்தார். எம்பாரைத் திருத்துவதற்கு த்ராவிட வேதங்களிறே காரணமாயிருந்தன. ஸம்ஸ்க்ருத வேதங்கள் 'மறை' என்று தம் பெயருக்கேற்ப அர்த்தங்களை மறை பொருளாகவே நிரூபிக்கும். ஆனால் த்ராவிட வேதங்கள் 'செய்ய'வைகளாய் ஸ்பஷ்டமாக அர்த்தங்களை ப்ரதிபாதிக்கும். ஶாஸ்த்ரம் கொண்டே அவஶ்யம் அறியவேண்டியதாய் நிஶ்சயிக்கப்பட்ட விஷயங்களாவன – தேஹத்திலும் வேறுபட்ட ஜீவாத்ம ஸ்வரூபம், ஆத்மாக்களுக்கு அதிபதியான பரமாத்ம ஸ்வரூபம், அவனையடைவதற்கான உபாயம், அவனையடைந்தால் கிடைக்கும் பேறு, அவனையடையத் தடையாயுள்ள கர்மவினை, அவனிடத்தில் அபசாரம் பல்வித துக்கங்களுக்கு ஹேது, பாகவதோத்தமர்களின் ப்ரபாவம், அவர்களை ஆஶ்ரயிப்பதால் மனதில் கல்மஷம் நிவ்ருத்தி முதலானவை.

ஶாஸ்த்ரங்கள் ஆத்ம ஸ்வரூபாதிகளை ஸம்ஶயாதிகளுடனே நிரூபித்தன. க்ருபை மிகுந்த ஆழ்வாரோ தன் த்ராவிட வேதத்தில் மிகவும் தெளிவாகவே அருளிச் செய்துள்ளார். சில ஶ்ருதிகள் ஜீவபர பேதம் சொல்லிற்று. சில ஶ்ருதிகள் ஜீவபர ஐக்யம் சொல்லிற்று. சிலர் அபேத ஶ்ருதிகள் அப்ரமாணம் என்றனர். சிலர் பேத ஶ்ருதிகள் அப்ரமாணம் என்றனர். சில ஶ்ருதிகள் ஶரீராத்ம ப$_4$ாவத்தால் இவையிரண்டுக்கும் பொருத்தத்தை நிரூபித்தன. இக்க$_4$டக ஶ்ருதிகளே ப்ரதானம் என்பதை ஆழ்வார் 'சுடர்மிகு சுருதி' என்று அநுஸந்தித்தருளினார்.

ஆத்ம ஸ்வரூபத்தை அறியும் விஷயத்தில், ஜ்ஞானானந்தாதிகளிலும் ஶேஷத்வ ஸ்வரூபமே ப்ரதானமாக அறியப்படவேணும் என்பதை 'அடியேன் சிறிய ஞானத்தன்' (1.5.7), 'அடியேனுள்ளான் உடலுள்ளான்' (8.8.2) இப்புடைகளிலே நிரூபித்தருளினார். அடியேனுள்ளான் உடலுள்ளான் – ஈஶ்வரன் ஆத்மவஸ்துவில் உள்ளான், அசித்தான உடலில் உள்ளான் என்பதில் ஆத்மவஸ்துவை 'என்னுள்ளான்' என்னாதே 'அடியேன்' என்றே சொல்வதால் ஶேஷத்வமே ப்ரதானம் என்றபடி. ஶேஷத்வ ஜ்ஞானமில்லாவிடில் மற்ற ஜ்ஞானங்கள் யாவும் அஸத்ஸமமாகும். மேலும், ஶேஷத்வம் ஶேஷத்வ கார்யத்தைக் குறித்து அத்தால் பகவத் கைங்கர்யமே ப்ரயோஜநம் என்பதையும், அதனையும் அவன் பேறாகச் செய்யவேணும் என்பதையும் 'தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே' (2.9.4) என்று உத்கோஷித்தது த்ரமிட வேதமே. ஶேஷத்வம் ஸ்வரூபநிரூபித தர்மமாய், ஜ்ஞானானந்தாதிகள் நிரூபித ஸ்வரூப விசேஷணங்களாய் இருக்கும் என்றதாயிற்று. சேதனன் தான் அநந்யார்ஹ ஶேஷபூதன் என்பதையறிந்து மறந்தும் புறந்தொழாதவனாயிருக்க வேணும் என்றதும் த்ரவிட வேதமே.

ஶ்ருதி பரமாத்ம ஸ்வரூபம் 'ஜ்ஞானானந்த மயமாயிருக்கும்' என்பதை நிரூபிக்கும் ப்ரகரணத்தில் 'யத$_2$ா ஸைந்த$_4$வக$_4$ந:' (ப்ருஹ.உப) என்று உப்புக்கட்டியை த்ருஷ்டாந்தமாகச் சொல்லிற்று. ஆழ்வாரோவென்னில் 'உணர்முழுநலம்' (1.1.2) 'கன்னல்கனி' (3.6.7) என்றருளிச் செய்தார். 'ஈசன்

வானவர்க்கென்பன் என்றால், அது தேசமோ திருவேங்கடத்தானுக்கு' (3.3.4) என்று 'பகவானுடைய பரத்வாதிகள் ஸாரமானவையல்ல; ஸௌசீல்யாதி குணகனாயிருப்பவன் அவன் என்றறிவதே ஸாரம்' என்றுமருளிச் செய்தார். பரமாத்ம ஸ்வரூபத்தை பேசிய வேதம் அவன் நித்யவிபூதி யுக்தன், ஸகல கல்யாண குணங்களையுடையவன், அப்ராக்ருத திருமேனியையுடையவன், ஸகல சேதனாசேதனங்களிலும் அந்தர்யாமியாயிருந்து யாவற்றையும் நியமித்துப் போருபவன், அவ்வாறு இருப்பதாலேயே ஜகத்காரணமுமாவான் என்று ஓதிற்று. ஆழ்வார் 'அமரர்களதிபதி' (1.1.1) என்று நித்யவிபூதி யோகத்தையும், 'நிலனிடை விசும்பிடை யுருவினன் அருவினன்' (1.1.3) என்று லீலாவிபூதி யோகத்தையும், 'உயர்நலமுடையவன்' (1.1.1) என்று மிகவுயர்ந்த ஆனந்தம் முதலான கல்யாண குணங்களையுடையவன் என்றும், 'சோதியாகி எல்லா உலகும் தொழும் ஆதிமூர்த்தி' (3.3.5) 'நிறமுடை நால் தடந்தோள் செய்யவாய் செய்ய தாமரைக்கண் ......... கருமேனியம்மான்' (5.1.6) என்று அழகிய திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவன் என்றும், 'அவனேயவனும் அவனும் அவனும்' (9.3.2) என்று விதிசிவாதிகளுக்கு அந்தர்யாமியாயிருப்பவன் என்றும், 'கரந்தெங்கும் பரந்துளன்' (1.1.10) என்று யாவற்றையும் உட்புகுந்து நியமித்துப் போருபவன் என்றும் தெளிவாக அருளிச்செய்தார். 'வேர் முதலாய் வித்தாய்' (2.8.10) என்றும் 'முதல்தனி வித்தேயோ முழு மூவுலகாதிக் கெல்லாம்' (10.10.9) என்றும் 'ஸர்வலோகங்களுக்கும் த்ரிவித காரணமானவன் அவனே' என்பதையும் மிகவும் தெளிவாக அருளிச்செய்தார். 'முதல்வன் தன்னை' (3.6.2) என்றதால் தான் ப்ரஹ்மருத்ரர்களுக் காரணமானவோபாதி தனக்கு அவ்வருகு காரணாந்தரமின்றிக்கேயிருப்பவன் என்றபடி. எந்த தேவதையை ஆராதித்தாலும் அந்தந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியாய் நின்று பலனளிப்பவன் அவனே என்பதையும் 'அவரவர் விதிவகையடைய நின்றனரே' (1.1.5) என்றருளிச் செய்தார்.

வேதம் நாம் எம்பெருமானை உபாஸித்து மோக்ஷமடைவதற்கு பல உபாஸனங்களை தெரிவித்துள்ளது. ஆயினும் நாம் அவனையடைவதற்கு அவனது இரக்கமே ஸாதனமாகும். 'கட்கிலீ உன்னைக் காணுமாறு அருளாய்' (7.2.3) 'உம்மைக் காண நீர் இரக்கமிலிரே' (2.4.2) என்று எம்பெருமானது இரக்கமே பேற்றுக்கு ஸாதனம் என்று காட்டியருளியது ஆழ்வாரன்றோ. 'யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:' (முண்ட. உப) எவனை அந்த பரமாத்மாவே வரிக்கிறதோ அவனாலேயே அது அடையத்தகுந்தது - என்கிறபடி எம்பெருமானே தன்னைக் காட்டக் காணவேணும். 'ப்ரியதம ஏவஹி வரணியோ ப$_4$வதி' - மிகமிக ப்ரீதிக்கு விஷயமானவனன்றோ பகவானால் வரிக்கத் தக்கவனாகிறான் என்று ஸ்ரீபாஷ்யம் (1.1.1). 'ஒருநாள் காண வாராயே' (8.5.1) என்றதால் அவன் வரக்காண ஆழ்வார் இருப்பதாகவும், தான் கிட்டிக் காண்பது தன் பாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்கு விரோதம் என்றும் தெரிவித்தபடி. அத்தகைய முக்தாத்மாவை அவனே ஸூரிகளைக் கொண்டு எதிர்கொண்டழைத்து அதிலும் த்ருப்தியுறாமல் தானே முக்தாத்மாவை நடத்திச் செல்கிறான் என்பதை 'சூழ்விசும்பணி முகில்' (10.9.1) விஸ்தாரமாகச் சொல்கிறது. வேதம் 'எல்லாத் தேவர்களும் இவனுக்கு காணிக்கை ஸமர்ப்பிக்கிறார்கள்' என்று மட்டும் சொல்லிற்று. இங்கு சொல்லப்பட்ட தேவ பதம் நித்யஸூரிகளையும், பிராட்டியையும், எம்பெருமான் தன்னையும் குறிக்கும் என்பதை ஆர்வார் தாம் கண்டபடியே தெரிவித்துள்ளார். உபாயங்களில் ஆசார்ய நிஷ்டையே சரமோபாயம் என்பதனை 'வேதம் வல்லார்களைக் கொண்டு' (4.6.8) என்றும் 'விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே' (நாச்.திரு. 10.10) என்றும் அருளிச்செய்து போந்தார்கள்.

வேதம் முமுக்ஷுவுக்கு ப₂லம் சொல்லுகிறவிடத்தில் புண்யபாபரூப கர்ம விமோசனத்தையும், ஒரு தேஶவிஶேஷ ப்ராப்தியையும், பரம ஸாம்யாபத்தியையும் ப₂லமாகச் சொல்லிற்று. ஆயினும் ஸம்ப்ரதாயத்தில் பரம புருஷார்த்தமாகச் சொல்லப்படுவது திவ்யதேசங்களில் அவன் திருவடிகளிலே பண்ணும் கைங்கர்யமிறே. 'ஒழிவில் காலமெல்லாம்' (3.3.1) சதுர்த்தியின் அர்த்தம் சொல்லுகிறது. இதில் கைங்கர்யத்தை ப்ரார்த்தித்து உலகமுண்ட பெருவாயனிலே (6.10) ஶரணம் புகுகிறாராகையாலே, இதில் த்₃வயத்தின் பிற்கூற்றினர்த்தமும் அதில் முற்கூற்றினர்த்தமும் சொல்லிற்றாகிறது. ஶாஸ்த்ரங்களாலே 'இதுவே புருஷார்த்தம்' என்றறிகை போராது, அநுஷ்டான பர்யந்தமாக வேணும் என்பதை 'செய்ய வேண்டும்' என்பதாலும், 'வழுவிலா அடிமை' என்பதால் பரமஶேஷியானவனுக்கு ஸர்வஶேஷ வ்ருத்தியும் பண்ணவேணும் என்றும் சொல்லிற்று. இளைய பெருமாள் போலே பிரியாதே காட்டிற்கும் சென்று செய்த அடிமைகளும் செய்யவேணும். ஸ்ரீபரதாழ்வான் போலே அரண்மனையில் பிரிந்திருந்து செய்த அடிமைகளும் செய்யவேணும். அவ்வாறு கைங்கர்யம் செய்யுமிடத்தில் யாதொன்று எதிர்முக மலர்த்திக்குறுப்போ அதையே செய்யவேணும். ஸ்வேச்ச₂ாதீ₄ந கைங்கர்யம் ஸ்வரூபமன்று. உபேயத்துக்கு ப்ரேமமும், தன்னைப் பேணாமையும், தரியாமையும் வேணும் – இளைய பெருமாளைப் போலே, ஜடாயுவைப் போலே, சிந்தயந்தியைப் போலே. 'மன்னி' – அழகோலக்கம் கொடுக்கும் போதோடு, நாச்சிமாரும் அவனுமாய் இருக்கும் போதோடு வாசியற திருவனந்தாழ்வானோபாதி அடிமை செய்யவேணும். முக்தனாய் பரமபதமேறினால், ஓலக்கம் கொடுக்கும்போது சத்ரசாமராதி பாணியாயும், அந்தரங்க தஶையில் படுக்கை, படிக்கம், காளாஞ்சி, லீலாசுகம் தொடக்கமானவையாயும் இடைவிடாமல் அன்றோ அடிமை செய்து போருவது.

பகவத் ப்ராப்திக்கு தடையாயிருப்பவை கர்மவினைகள். ஶ்ருதி 'ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே' 'பாபம் கர்ம நஶ்யிஷ்யதே' என்று எம்பெருமானை உபாஸிப்பதால் முன்பு செய்த பாபங்கள் அழியும்; இனி வரப்போகும் பாபங்கள் ஒட்டா என்று சொல்லிற்று. ஆழ்வார் 'நாளும் நின்றடுநம் பழமை அங்கொடு வினையுடனே மாளும்' (1.3.8) 'காற்றின் முன்னம் கடுகி வினைநோய்கள் கரியவே' (4.5.5) 'அறுக்கும் வினையாயின' (9.8.1) முதலான பாசுரங்களில் பகவத் ப்ராப்திக்குத் தடையான ஸகல விரோதிகளும் கழியும் என்றருளிச் செய்தார். அதாவது பகவத் விஷயத்திலே ஆசை பிறக்க வொட்டா ப்ரயோஜநாந்தர ஸங்கத்தை (ருசி விரோதி), அவனே உபாயமென்று அத்யவஸிக்கவொட்டா உபாய விரோதி, அவன் திருவடிகளை ப்ராபிக்கவொட்டா அவித்யா கர்ம வாஸநா ருசிகள், பாகவதாபசாரம் முதலியவனைத்தும் கழியும் என்றபடி. மேரு மந்த₃ர மாத்ரோऽபி ராஶி: பாபஸ்ய கர்மண: । கேஶவம் வைத்ய மாஸாத்₃ய து₃ர்வ்யாதி₄: இவ நஶ்யதி ।। (மேரு மந்த்ர மலைகள் போன்ற பாபகர்மக் குவியல்களும், கேஶவனையடைந்தவுடன், நல்ல வைத்யனைக் கிட்டினால் வ்யாதிகள் விலகுவது போல் விட்டு நீங்குகிறது) என்று விஷ்ணு தர்மம்.

எம்பெருமானிடம் அபசாரப்படுவதால் அநுபவிக்கும் துக்க பரம்பரைகட்கு அவனையே கால்கட்டி தீர்க்க ப்ராப்தம். 'உன் பாதநிழலல்லால் மற்றோருயிர்ப்பிடம் நானெங்கும் காண்கின்றிலேன்' (பெரியா. திரு. 5.3.4) 'பாவியேனைப் பல நீ காட்டி படுப்பாயோ' (திருவாய் (6.9.9) இத்யாதிகளில் இவ்வர்த்தம் ப்ரதிபாதிதம்.

பாகவதர்களின் ப்ரபாவத்தில் ஸாரமாய் அறிய வேண்டியது, அவர்களது அநுக்ரஹத்தைப் பெறுவதே. இவ்வர்த்தம் 'பயிலும் சுடரொளி' 'நெடுமாற்கடிமை'களில் பரக்கப் பேசப்பட்டது. பாகவத ப்ரபாவத்தை ஶ்ருதி கண்டரவேண ப்ரதிபாதிக்கவில்லை. திருவாய்மொழி பகவானை

ப்ரதிபாதித்திருந்தாலும் 'தொண்டர்க்கமுதுண்ணச் சொல்மாலைகள் சொன்னேன்' (9.4.9) என்கிறபடியே பாகவதானுஸந்தானத்திற்காகவிறே திருவாய்மொழி பாடியது.

பாகவதர்களை ஆஶ்ரயித்து மனதின் கல்மஷத்தை போக்கடித்துக் கொள்வதில் ஸாரம் 'தீர்ப்பாரை' (4.6.1) என்கிற திருவாய்மொழியின் படியே தேவதாந்தர ஸம்பந்த பர்யந்தமான அத்யந்த காலுஷ்ய நிவ்ருத்தி உண்டாவதாம். 'விண்ணோர் பிரானார் மாசின் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே' (திருவி. 54).

'எம்பெருமான் ஶேஷி நாம் ஶேஷபூதர்' என்பதை மறந்து 'அத்தலைக்கு என்ன தீங்கு வருமோ' என்று அவனுக்கு மங்களாஶாஸனம் பண்ணுவது பக்தியின் பராகாஷ்டையில் ஒருபடியாகும் என்பதையும், ஸ்ரீவைஷ்ணவர்கட்கு அத்யாவஶ்யமான தப்த சக்ராங்கன விஷயத்தை 'தீயில் பொலிகின்ற செஞ்சுடராழி ....... ஒற்றுண்டு' (திருப்பல். 7), 'என்னையும் என்னுடைமையையும் உன் சக்கரப்பொறி யொற்றிக் கொண்டு' (பெரியா.திரு. 5.4.1) என்றும் ஆழ்வார்களன்றோ தெளியவருளிச்செய்தார்கள். அர்ச்சாவதாரத்தின் உத்கர்ஷத்தை 'தமருகந்த தெவ்வுருவம்' (மு.திரு. 44) என்றும் 'அவன் இவன் என்று கூழேன்மின்' (3.6.9) என்றும் உத்கோஷித்தது திரமிட வேதமே. மேலும், வேதாந்த ஸாரமான ரஹஸ்யத்ரயார்த்தங்களை த்ரமிடோபநிஷத் நிரூபிக்கும் ப்ரகாரம் யாவரும் அறிந்ததே. பரதேவதா நிர்த்தாரணத்தில் ஸம்ஸ்க்ருத வேதங்கள் த்ரமிட வேதங்கள் போல் நிஷ்கர்ஷம் செய்யவில்லை. ஆக, 'செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளியவோதி தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே' என்றநுஸந்திப்பது உண்மையில் நாம் பெற்ற பேற்றை அநுஸந்திக்கிறபடி.

திருவாய்மொழிக்குள்ள ஆறு தனியன்களில் ஒன்று 'வான் திகழுஞ்சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல், ஆன்ற தமிழ்மறைகளாயிரமும், ஈன்ற முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்' என்பது. திருவாய்மொழியைப் பெற்ற தாயார் நம்மாழ்வார். வளர்த்த தாயார் எம்பெருமானார். அருளிச்செயல்களுக்கு வ்யாக்யானங்கள் அவதரிக்க நியமனம் தந்தருளியும், ஆங்காங்கு சிறப்பான நிர்வாஹங்களை வெளியிட்டும், திவ்யதேசங்களில் அருளிச்செயலை ப்ரபலப்படுத்தியும் எம்பெருமானார் செய்தருளின சேமக்காப்பு வாசாம் அகோசரம். 'ராமாநுஜார்ய தி₃வ்யாஜ்ஞா வர்த₄தாம் அபிவர்த₄தாம்' என்பதில் திவ்யாஜ்ஞையாவது திவ்யப்ரபந்த விஷயமேயன்றி வேறு விஷயமன்றிறே.

'முதலில் வியாஸ பகவான் உபநிஷத்துக்களின் அர்த்தங்களை சாரீரக மீமாம்ஸையெனும் ப்ரஹ்மஸூத்ரத்தினால் தொகுத்தார். அவரே மீண்டும் நம்மாழ்வாராகி அந்த ப்ரஹ்மஸூத்ரத்தை செவிக்கினிய செஞ்சொற்களால் விவரித்தார். பின் மீண்டும் அவரே இவ்வுபய க்ரந்தங்களையும் யுக்திகளாலே ஸமந்வயப்படுத்தி நிர்வஹிக்க ஸ்வாமி எம்பெருமானாராக திருவவதரித்தார்' என்பதை

> புரா ஸூத்ரைர் வ்யாஸ: ஶ்ருதிஶத ஶிரோர்த்த₂ம் க்₃ரதி₂தவாந்
> விவவ்ரே தம் ஶ்ராவ்யம் வகுளத₄ரதாம் ஏத்ய ஸ புந: |
> உப₄ராவேதௌ க்₃ரந்தௌ₂ ஃக₄டயிதுமலம் யுக்திபி₄ரஸௌ
> புநர் ஜஜ்ஞே ராமாவரஜ இதிஸ ப்₃ரஹ்மமுகுர: ||

எனும் (ஆச்சான்பிள்ளை அருளிச்செய்த) ஶ்லோகம் தெரிவிக்கிறது. இது கொண்டே ஆசார்ய ஹ்ருதயத்தில் 'பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ர வாக்யங்களொருங்க விடுவர்' என்றருளிச் செய்யப்பட்டது.